உ

ஸ்ரீ குருப்யோ நம:

**ஸ்ரீ ஆதி சங்கர பகவத்பாதர்கள்**

அருளிச்செய்த

# ஶிவானந்த³லஹரீ



நமது சபையின் ஆதரவில்

**ஸ்ரீவத்ஸ, ஸோமதேவசர்மா** அவர்களால்

மேலமாம்பலம் **ஸ்ரீ சங்கர மடத்தில்** நிகழ்த்தப்பட்ட

பிரவசனங்களைத் தழுவி

**ஸ்ரீ ஆங்கீரஸன் எழுதிய**

சுருக்கமான தமிழ் உரையுடன் கூடியது.

श्रीः

मुद्रा

॥ श्रीमुखं ॥

முத்³ரா

ஶ்ரீ:

॥ ஶ்ரீமுக²ம் ॥

ஶ்ரீகாஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு

## ஶ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள் ஶ்ரீமடம்,

காஞ்சீபுரம்.

முகாம்: அம்பி க்ராமம், (காஞ்சிபுரம்.)

தேதி: 22-4-64.

உயர்ந்த புருஷார்த்தமான மோக்ஷத்தை அடைவதற்கு வேதம் முதலிய பரமாண க்ரந்தங்களில் உபதேசிக்கப்பட்டுள்ள கர்ம-பக்தி-ஞான மார்க்கங்களுள் பக்தியானது கர்ம மார்க்கத்துக்கும், ஞானமார்க்கத்துக்கும் உபகாரமாயிருப்பதால் ப்ர தானமானது. அவரவர்களின் ருசியை அனுஸரித்து பரமாத்மாவின் பல்வேறு மூர்த் திகளில் வைக்கப்படும் பக்தியானது ஸகல இம்மை மறுமைப் பயன்களையும் அளி க்க வல்லது. இத்தகைய உத்தம ஸாதனமான பக்தியை விருத்தி செய்து கொள்ள ப்ராசீன மஹான்களால் அருளப்பட்டுள்ள ஸ்தோத்ரங்கள் நமக்குப் பேருதவி புரிகின்றன.

இந்த ரீதியில் ஶ்ரீ ஆதி சங்கர பகவத்பாதாசார்யாளால் அனுக்ரஹிக்கப்பட்டு ள்ள பரமேச்வர ஸ்துதியான ஶிவானந்த³லஹரீ முக்ய ஸ்தானம் வஹிக்கிறது. இந்த ஸ்துதியில் ஹாலாஹல விஷத்தையுண்டு உலகைக் காப்பாற்றியது தீன வாத்ஸல்யம் முதலிய பரமேச்வரனின் பெருமைகள் நன்கு விளக்கப்பட்டிருக் கின்றன.

ஸம்ஸ்கிருத பாஷையில் உள்ள இவ்வுத்தம நூலின் பொருளைத் தமிழறிந்த வர்கள் உணர்ந்து கொள்வதற்காக ஸாஹித்ய வாங்முக பூஷண ப்ரஹ்மஶ்ரீ ஸோம தேவ சர்மா அவர்களினுல் மேல மாம்பலம் ஶ்ரீ சங்கரபக்தஜன ஸபாவின் ஆதரவில் ஞாயிறுதோறும் உபன்யஸிக்கப்பட்டு வந்ததைத் தொகுத்துப் புத்தகரூபமாக வெளி யிடுவதை அறிந்து ஶ்ரீ மஹா ஸன்னிதானத்தில் ஸந்தோஷிக்கிறுர்கள்.

ஆஸ்திகர்கள் இந் நூலின் துணைகொண்டு பரமேச்வரனை பஜித்து ஸகல மங்களங்களையும் அடையும்படி ஶ்ரீ மஹா ஸன்னிதானத்தில் அனுக்ரஹிக்கிறுர்கள்.

ஆக்ஞைப்படி,
(ஒப்பம்) M.V. கிருஷ்ணமூர்த்தி அய்யர்
மானேஜர்

உ

# ஶிவானந்த³லஹரீ

## முன்னுரை

மதிப்பிற்குரிய வாசகர்களுக்கு,

வணக்கம்.

**ஶ்ரீ** பகவத்பாதர்கள் அருளிய **ஶிவானந்த³லஹரீ** என்ற கிரந்தம் பிரதி வாரமும் நம் சபையின் சார்பில் மேல மாம்பலம் ஸ்ரீ சங்கரமடத்தில் உபன்யாஸம் நடைபெற்று சிறப்புடன் முடிவுபெற்ற விஷயம் அனைவரும் அறிந்ததே. **ஸ்ரீவத்ஸ ஸோமதேவ சர்மா** அவர்களின் விரிவான உபன்யாஸத்தைப் பின்பற்றி அடியேன் ஒரு சுருக்கமான உரை எழுதியிருக்கிறேன். "பருப்பொருளாகிய பாயிரங் கேட்டால் நுண் பொருளாகிய நூல் இனிது விளங்கும்" என்ற விதியை அனுசரித்து ஷெ கிரந்தத்தின் ஸ்தூலமான பொருளமைப்பைத் தெரிந்துகொள்ள **Dr. T. M. P. மஹாதேவன்** அவர்களது ஆங்கில முன்னுரையும் வெளியிடப்பட்டு இருக்கிறது. அதைத் தமிழில் மொழிபெயர்த்துப் பிரசுரிக்க அவாக்கொண்டாலும், அவகாசக் குறைவு மட்டுமன்றி டாக்டர் அவர்களின் ஆங்கிலப் பொருளழகைச் சிதைக்காமல் மொழிபெயர்க்க முடியுமா என்ற ஐயமும், அச்சமுங்கூட எழுந்தது. எனவே ஆங்கில த்தில் அப்படியே பிரசுரம் செய்யப்பட்டு இருக்கிறது. பல அன்பர்கள் விரும்பியபடி பகவான் ரமணர் பொறுக்கியெடுத்த 10 ஶ்லோகங்களும் தனியாகப் பிரசுரிக்கப்பட்டு இருக்கிறது.

ஸ்ரீ பகவத்பாதர்கள் சிவானந்தலஹரீயை சகல சிறப்புக்களுடனும் கூடிய தொரு கன்னிகையாக வர்ணித்து ஸ்ரீ பரமேஸ்வரனுக்கு அர்ப்பணம் செய்து இருக்கி றுர்கள். அக்கன்னிகையை அம்பாளின் ஸ்வரூபமாகவே அறியவேண்டும். எனவே இந்த கிரந்தத்தை பிரஹ்மவித்யா ஸ்வரூபிணியான சாக்ஷாத் பராசக்தியின் ஸ்வரூ பமாகவே தியானித்து பாராயணம் செய்ய வேண்டும். ஆண்கள், பெண்கள், குழந்தை கள், பெரியவர்கள் யாவரும் இதைப் பயின்று சிவானந்த வெள்ளத்தில் மூழ்க வேண்டும் என்பது அடியேன் உள்ளக்கிடக்கை.

பக்தர்கள் அர்த்தத்தை அனுசந்தானம் செய்துகொண்டே பாராயணம் செய்ய வேண்டுமென்ற எண்ணத்துடன் தமிழ்உரை எழுதப்பட்டதேயன்றி, பூரணமாகப் பொருளை வெளியிட்டுவிட்டதாக நினைக்க இடமில்லை. மொழிபெயர்ப்பாகவும் இல்லாமல் சுருக்கமாக ஸ்லோகத்தின் தாத்பரியத்தையே வெளியிட முயற்சிக்கப் பட்டிருக்கிறது. குற்றம் களைந்து குணத்தைக் கைகொள்ளுமாறு பெரியோர்களை வேண்டிக் கொள்கிறேன். குணம் ஏதேனுமிருப்பின் அது எங்கள் அத்யக்ஷகர் ஸ்ரீவத்ஸ ஸோமதேவ சர்மா அவர்களையும், குற்றங்கள் யாவும் அடியேனையும் சேரவேண்டியது. இச் சுருக்க உரை எழுத ஸ்ரீவத்ஸ ஸோமதேவ சர்மா அவர்கள் பிரவசனங்களுடன், மேலும் **Dr T.M.P.** மஹாதேவன் அவர்களது ஆங்கில விளக்க

உரையும் ஸ்ரீ தாராகாடு பத்மனாபன் அவர்களின் மிக விரிவான தமிழ் உரையும் அடியேனுக்கு உதவிசெய்தது. விரிவான உரை வேண்டுவோருக்கு அவ்விரு நூல்க ளையும் இதன்மூலம் அறிமுகப்படுத்துகிறேன்.

இங்ஙனம்,
ஆசார்ய பக்தஜன விதேயன்,
**ஆங்கீரஸ வேங்கடேச சர்மா**.

# SIVANANDALAHARI

## INTRODUCTION.

By : **T. M. P. MAHADEVAN,** M. A., Phd.

The *Sivanandalahari.* ascribed by tradition to Adi Sankara, is a grand hymn to Siva, beautiful in form and content. In the ninty-eighth verse, the excellences of this composition are mentioned by the author himself, without the least exaggeration. Employing words in a double sense (*slesa*), which itself is a skilled poetic device, the poem is offered to the Lord for His pleasure; He is invited to take this ideal maiden endowed with all the graces as His bride. The graces that adorn the poem cover both style and sense. The lilting cadences and divine music of the words will enthrall the reader's heart; the profound truths expressed in those words will exalt his mind. Out of great compassion for the struggling souls, Sri Sankara has given in this century of verses a litany that can serve as a constant and unfailing guide in their march towards perfection.

As the *Sivanandalahari* is a hymn to Siva, the greatness of God as Siva is stressed in every verse. The stories and legends of Siva that are to be found in the Puranas are made use of to illustrate the benignant and benevolent nature of Siva. Some Vedic scholars are of the view that Rudra is a malevolent deity intent on destroying those whom he dislikes, and that he came to be called 'Siva' euphemistically later on. One writer contrasts Rudra - Siva, whom he regards as the God that is feared, with Vishnu - Narayana who is the God that is loved. That there is no basis for such a view will be evident to those who study the texts in their proper context. The picture of Siva that we have in the *Sivanandalahari* is that of the supreme God who is the source of auspiciousness (*Sambhu*), who does what is auspicious (*Sankara*), who is auspiciousness itself (*Siva*). Siva is the saviour of souls, the giver of all that is good. His grace confers on the soul the highest good, *moksa*.

The central theme of the *Sivanandalahari* is devotion to God. In this poem, Acharya Sankara makes use of every literary device to set forth the nature of devotion (*bhakti*) and to indicate its importance in the scheme of spiritual discipline. Devotion means 'directing the modes of the mind to flow constantly towards God and making them get absorbed there.' Thinking, feeling and willing are the main functions of the mind. When these functions come to have God alone as their end, the mind is said to be devoted. In the course of teaching this profound truth, Sankara compares the mind to several things and uses picturesque language. Lessons are drawn from inanimate things and animate beings, and from every grade of existence, sub - human, human, and divine. Various expressions are used to refer to the cognitive aspect of mind; *citta*, *cetas*, *buddhi* and *manas*; the word *hrdaya* which is also used implies the emotional side of mind; and *dhrti* indicates resolve and the strength of will. Different comparisons are given to show that each one of these functions should be dedicated to Siva.

Seeking to define devotion in a verse (61), Sankara compares the constant flow of the mind towards God (a) to the movement of the seeds of the *ankola* tree, on falling to the ground, towards the trunk of the tree and sticking there, (b) to the attraction of iron - filings to the magnet, (c) to the unceasing attachment of a chaste woman to her lord, (d) to the entwining of a creeper around a tree, and (e) to the coursing of a river to the ocean. The point in all these comparisons is the constancy of attachment, the singleness of singleness of purpose. The lower

member in each of these analogies cannot but be united with the higher member. When the mind is united with God in a similar manner, we have devotion.

The mind of the devotee knows no other end except the Lord. The longing of the devoted mind for God is compared to the longing of the swan for the lotus - tank, of the *cataka* bird for the dark rain - cloud, of the *chakravaka* bird for the sun, and of the *cakora* bird for the moon (59). Here the mind filled with devotion is compared to four species of birds. Each of these birds longs for what sustains them; the swan lives by eating lotus - stalks; the *cataka* can drink only the rain drops from the clouds; the *chakravaka* looks forward eagerly to sun - rise; and the *cakora* is sustained by lunar rays. So also, the devoted mind finds solace only in God; nothing else can satisfy it.

The mind of the worldling does not easily turn towards God. Like a monkey, it leaps from desire to desire. But if Siva who plays the role of a mendicant will bind the monkey with the cord of devotion, then it will do His bidding and thus be an aid to Him (20). The mind is like a thief; it wants to grab and amass wealth even by illegitimate means; passions like greed and avarice hold it in their power; it is driven to act in violation of *dharma*. Who can control this thief except the Arch - thief who is Siva? It is He that must come to our rescue and save us by keeping this mind - thief under effective check (22). The mind is mighty and turbulent like an untamed elephant. Like an elephant in the period of heat, it roams about in all directions, and in a wild manner. It is Siva that should bind it tactfully with the cord of devotion, using the goad of courage and the machinery of intelligence, and tie it to the peg of His Feet, so that it may not stray (96, 97). The mind is like a dense forest which is the abode of wild beasts. The passions are the beasts. Siva who is the Primeval Hunter will find in this forest plenty of game. Let Him engage Himself in sport and derive delight therefrom (43). The mind is an old box filled with disagreeable odours in the form of residual impressions. If these odours are to be overpowered and removed, Siva must fill the box with the pleasant scents of divinity. By His Grace, let Him remove from the mind desire. delusion, and passion (74).

What one should offer to God is one's own mind and heart. Why should a devotee put himself to the trouble of gathering external flowers? Why go to the forests, hills and tanks in quest of blooms? The heart - lotus is the most acceptable offering to the Lord (9). It is only when the heart - lotus is offered to the Lord that He takes on Himself all the burdens of the devotee (11). Let us invite the honey - bee, the Lord, to revel in the mind - lotus (61). Let the Lord occupy the tent of the mind, which has firm resolve as the central pole, which is tied with the ropes of constant qualities, which can be moved at will, which is beautiful and finely decorated, and which is pure and spotlessly clean (21). Why should the Lord still use His conventional mount, the Bull? He is the leader of all the worlds? Let Him ride the mind - horse which is endowed with all the excellences (75). Siva has to perform very hard tasks with His Feet - tasks such as kicking at the chest of Yama (Death), destroying the stiff Apasmara (Nescience), walking on Mount Kailasa, and rubbing against the crowns worn by the Gods on their heads. How can He undertake these operations with bare feet? Let Him wear the jewelled footwear of the mind which will stand all the rough usage (64). Siva likes to reside in fortresses. Let Him stay, then, in the mind - fortress which is impregnable, well - guarded, and provided with every convenience (42). If only Siva the Lion, will come into the mind - cave and remain there, there will be no fear from any quarter (40). If in the capital - city of the mind - lotus the King of kings takes His seat, all will be well; virtue will flourish, sins will disappear, passions will be banished, the Golden Age will dawn, and there will be all - round prosperity (39). If Siva, the Moon, appears in the mind - sky, the waves of the ocean of bliss will leap, and all good people will rejoice (38). Let us perform the auspicious punyahavachana, making the mind

the pot, filling it with the ambrosia of joy, placing thereon the tender leaves of the Feet of the Lord and the coconut of wisdom, and uttering the sacred formula of the Lord's name (36).

The mind is a maiden fit to serve the Lord. She has all the qualifications required for such service. Let her be accepted as a companion to Gauri in the Lord's service (84). Like a woman separated from Her Lord, the mind constantly thinks of Siva and is lost in contemplation. The name of Siva works like a magic - spell on her. All her faculties have only one concern, and that is Siva (77). Let Siva hasten and take care of the mind - bride. It is His duty to instruct and train her. She deserves to have Him as her Lord, for she knows how to serve, is humble, has a good heart, and is devoted to the pursuit of goodness (78).

Devotion has to be cultivated with infinite care and patience. The farm of the heart should be irrigated with the ambrosial waters of the story of Siva brought with the help of the intellect as water - wheel through the channels of poesy; then, in that farm will arise a goodly crop, and there will be no fear of a famine (40). The heart is a garden, and meditation, is the spring season. The garden in this season is full of creeper - plants of devotion, which having shed the old leaves of sin have taken on fresh tender leaves of merit. The words that repeat the sacred name are the blooms, bearing sweet scents in the form of good impressions. Wisdom and bliss are the full - blown flowers, filled with the honey of immortality. The fruit that the creepers of devotion bear is the supreme consciousness (47). The mind serves as a *pandal* for the creeper of devotion to spread and bear fruit (49). The mind is like a lake; if it is filled with waters of joy that come down from the cloud of devotion, then life will come to fruition, and not otherwise (76). The flood of Siva - bliss flows from the river of the story of Siva, removes the dust of sin. courses through the channels of the intellect, destroys the sorrow caused by transmigration, and fills the lake - land of the mind (2).

In a few verses, Sankara pictures the mind as a swan, and exhorts it to seek refuge in the Feet of the Lord. The Lord's Feet are like a mansion, brilliantly lit by the splendour of their toe - nails, white - washed with the rays of the waxing moon, and embellished with rubies. Let the royal swan, the mind, resort to this mansion (46). The mind - bird should rest in the nest of the Feet of the Lord, forsaking all futile wanderings. Here, it will find contentment and felicity, and will be freed from weariness and sorrow (45). Mind, the best of swans - let it betake itself to the lake of Siva - meditation which is the reservoir of eternal bliss, wherein bloom the lotus - hearts of Gods and sages; let not the mind - swan wander in the muddy pools of service to those that are low (48).

Advaita - experience is the final goal of devotion to, and meditation on, Siva. An approach to Advaita may be made through any form of saguna - worship, or through any mode of metaphysics. Acharya Sankara adopts in the *Sivanandalahari* the Saiva path for leading the devotee to Brahman - realization. Realization is gained when the bonds of *samsara* break. The bonds will break when nescience is destroyed. For the destruction of nescience, one should have wisdom. Wisdom dawns through the grace of God. It is wrong to think that there is no place for God or for devotion in Advaita. As a well - known verse puts it:

*Isvaranugrahad eva pumsam advaita - vasana,*
*mahadbhaya - paritrana dvitranam upajayate*.

'It is by God's grace alone that an inclination towards Advaita comes to men- to two or three that will save them from great fear (viz. *samsara*).'

Bhagavan Sri Ramana has given us a selection from the *Sivanandalahari*, consisting of ten verses rearranged, for the sake of conveying the quintessence of the poem. He has composed a mnemonic verse indicating the initial letters of the verses selected and their order in the selection:

*adı am - bhak - jana - ghato - vaksah*
*nara - guha - gabhi - vatuh,*
*adya - dasa sivananda -*
*lahari - sloka - sucika*.

The ten verses are: 61, 76, 83, 6, 65, 10, 12, 9, 11, and 91. (61) A definition of devotion is given with apt analogies. Devotion is constant contemplation of God. (76) When devotion fills the mind, life becomes worth - while and fruitful. (83) There is no point in being devoted to what is finite and limited; the object of true devotion is the Infinite Reality, God. (6) Logic cannot be a substitute for devotion. Skill in the art of argumentation will not yield happiness. It will only result in a weariness of the mind. (65) The devotee meets with no such bitterness. He gains the supreme happiness, conquering death. Even the Gods adore him. (10) What is important is devotion. Other considerations and conditions of life are of no consequence. (12) One may live anywhere and follow any mode of discipline; true *yoga* is devotion to God. (9) Devotion does not consists in mere external offering of flowers, etc., to God; it is the heart - gift that is true devotion. (11) One may be a devotee in any stage of life; if one surrenders oneself to God, He is ready to take on all the burdens. (91) The end of devotion is *moksa*. Devotion to God removes the darkness of ignorance by shedding the light of wisdom.

[Reproduced from Dr. T. M. P. Mahadevan's book "*Sankara's Hymn to Siva* (*Sivanandalahari*) with the kind permission of the author and the Publishers M/s. Ganesh & Co., (Madras) Private Ltd., Madras - 17. Copies available at their sales depots at N. S. C. B, Road. Madras - 1 and Pondy Bazaar, Madras - 17. Price per copy Rs. 4-00 ].

श्रीः

# ஶிவானந்த³லஹரீ

தமிழ் உரை: ஆங்கீரஸன்.

**कलाभ्यां चूडालङ्कृतशशिकलाभ्यां निजतपः-**
**फलाभ्यां भक्तेषु प्रकटितफलाभ्यां भवतु मे ।**
**शिवाभ्यामस्तोकत्रिभुवनशिवाभ्यां हृदि पुन-**
**र्भवाभ्यामानन्दस्फुरदनुभवाभ्यां नतिरियम् ॥ १॥**

**கலாப்⁴யாம் சூடா³லங்க்ருதஶஶிகலாப்⁴யாம் நிஜதப:-**
**ப²லாப்⁴யாம் ப⁴க்தேஷு ப்ரகடிதப²லாப்⁴யாம் ப⁴வது மே ।**
**ஶிவாப்⁴யாமஸ்தோகத்ரிபு⁴வனஶிவாப்⁴யாம் ஹ்ருதி³ புன-**
**ர்ப⁴வாப்⁴யாமானந்த³ஸ்பு²ரத³னுப⁴வாப்⁴யாம் நதிரியம் ॥ 1 ॥**

ஸகல கலைகளையும் ஸ்வரூபமாக உடையவர்களாயும், அலங்காரமாக சந்திர கலைகளை சிரங்களிலே தரித்தவர்களாயும், ஒருவருக்கொருவர் செய்த தவத்தின் பல ஸ்வரூபர்களாகத் தோன்றுகின்றவர்களாகவும், பக்தர்களிடத்திலே அறம் பொருள் இன்பம் வீடு என்ற நான்கு புருஷார்த்தங்களைப் பிரகாசப்படுத்துகிறவர்களாகவும், மூன்று லோகங்களுக்கும் எல்லையில்லாத மங்களத்தை அளிக்கின்றவர்களாகவும், ஹ்ருதயகமலத்திலே தியான ஸமயத்தில் புதிது புதிதாகப் பிரகாசிக்கின்றவர்களாயும், பிரம்மானந்த அனுபவமே ஸ்வரூபமாக உடையவர்களான பார்வதி பரமேஸ்வரர்களுக்கு இந்த என்னுடைய நமஸ்காரம் உரித்தாகட்டும்.

**गलन्ती शम्भो त्वच्चरितसरितः किल्बिषरजो**
**दलन्ती धीकुल्यासरणिषु पतन्ती विजयताम् ।**
**दिशन्ती संसारभ्रमणपरितापोपशमनं**
**वसन्ती मच्चेतोहृदभुवि शिवानन्दलहरी ॥ २॥**

**க³லந்தீ ஶம்போ⁴ த்வச்சரிதஸரித: கில்பி³ஷரஜோ**
**த³லந்தீ தீ⁴குல்யாஸரணிஷு பதந்தீ விஜயதாம் ।**
**தி³ஶந்தீ ஸம்ஸாரப்⁴ரமணபரிதாபோபஶமனம்**
**வஸந்தீ மச்சேதோஹ்ருத³பு⁴வி ஶிவானந்த³லஹரீ ॥ 2 ॥**

ஸுகத்தை அளிக்கும் பரம்பொருளே! உன்னுடைய சரித்திரமாகிய நதியிலிருந்து பெருகிவருவதும், பாவத்தைப் போக்கடிக்கின்றதாயும், புத்தி என்கிற வாய்க்கால் வழியாக ஓடி விதவிதமான தடாகங்களில் விழுவதும், ஸம்ஸார சக்ரத்தில் சுழல்வதால் ஏற்படும் துக்கத்திற்கு ஶாந்தியைக் கொடுப்பதாகவும், என்னுடைய மனமென்

னும் மடுவிலே வஸிக்கின்றதாயுமிருக்கின்ற ஶிவானந்தப் பிரவாஹம் (ஶிவானந்த லஹரீ) சிறந்து விளங்கட்டும்.

**त्रयीवेद्यं हृद्यं त्रिपुरहरमाद्यं त्रिनयनं**
**जटाभारोदारं चलदुरगहारं मृगधरम् ।**
**महादेवं देवं मयि सदयभावं पशुपतिं**
**चिदालम्बं साम्बं शिवमतिविडम्बं हृदि भजे ॥ ३ ॥**

**த்ரயீவேத்³யம் ஹ்ருத்³யம் த்ரிபுரஹரமாத்³யம் த்ரிநயனம்**
**ஜடாபா⁴ரோதா³ரம் சலது³ரக³ஹாரம் ம்ருக³த⁴ரம் ।**
**மஹாதே³வம் தே³வம் மயி ஸத³யபா⁴வம் பஶுபதிம்**
**சிதா³லம்ப³ம் ஸாம்ப³ம் ஶிவமதிவிட³ம்ப³ம் ஹ்ருதி³ ப⁴ஜே ॥ 3 ॥**

மூன்று வேதங்களினுலும் அறியப்படுபவனுகவும் மனதை ஆனந்திக்கச் செய்கிறவனுகவும், முப்புரங்களை எரித்தவனுகவும், எல்லாவற்றிற்கும் ஆதியாகவுள்ளவனுகவும், முக்கண்ணனுக இருப்பவனும் ஜடாபாரத்தைத் தரித்தவனுகவும், ஸர்ப்பங்களை மாலைகளாக அணிந்திருப்பவனுயும், கையில் மானைத்தரித்தவனுக இருப்பவனும் சகலதேவர்களுக்கும் மேலானவனுகவும் பிரகாசத்தோடு கூடினவனுகவும், என்னிடம் கருணையுடன் கூடிய பாபத்தை உடையவனுகவும், பசுபதியாகவும், ஞானத்திற்கு ஆஶ்ரயமாக இருப்பவனும், அம்பிகையுடன் கூடினவனுயும். நாட்டியம் செய்பவனுயுமிருக்கின்ற மங்கள ஸ்வரூபியான பரமேஸ்வரனை என்னுடைய ஹிருதயத்திலே தியானம் செய்கிறேன்.

**सहस्त्रं वर्तन्ते जगति विबुधाः क्षुद्रफलदा :**
**न मन्ये स्वप्ने वा तदनुसरणं तत्कृतफलम् ।**
**हरि ब्रह्मादीनामपि निकटभाजामसुलभं**
**चिरं याचे शंभो शिव तव पदाम्भोजभजनम् ॥ ४ ॥**

**ஸஹஸ்ஸ்ரம் வர்தந்தே ஜக³தி விபு³தா⁴: க்ஷுத்³ரப²லதா³ :**
**ந மன்யே ஸ்வப்னே வா தத³னுஸரணம் தத்க்ருதப²லம் ।**
**ஹரி ப்³ரஹ்மாதீ³நாமபி நிகடபா⁴ஜாமஸுலப⁴ம்**
**சிரம் யாசே ஶம்போ⁴ ஶிவ தவ பதா³ம்போ⁴ஜப⁴ஜனம் ॥ 4 ॥**

அல்பமான பலனைக் கொடுக்கின்ற தேவதைகள் லோகத்தில் ஆயிரக்கணக்கில் இருக்கின்றுர்கள். அவைகளுடைய ஆராதனத்தையோ, அவைகளால் அளிக்கப்பட்ட பலனையோ கனவில் கூட நான் எண்ணவில்லை. ஹே ஸம்போ! ஹே சிவ! உன் ஸமீபத்தில் இருப்பவர்களான விஷ்ணு, பிரம்மா முதலிய தேவர்களுக்கும் கூட துர்லபமான உன்னுடைய பாதத்தாமரைகளின் ஆராதனத்தை வெகுகாலமாக யாசிக்கின்றேன். (அருள்வாயாக என்றபடி)

स्मृतौ शास्त्रे वैद्ये शकुनकवितागानफणितौ
पुराणे मन्त्रे वा स्तुतिनटन हास्येष्व चतुरः ।
कथं राज्ञां प्रीतिर्भवति मयिकोऽहं पशुपते
पशुं मां सर्वज्ञ प्रथित कृपया पालय विभो ॥ ५ ॥

ஸ்ம்ருதௌ ஶாஸ்த்ரே வைத்³யே ஶகுனகவிதாகா³னப²ணிதௌ
புராணே மந்த்ரே வா ஸ்துதினடன ஹாஸ்யேஷ்வ சதுர꞉ ।
கத²ம் ராஜ்ஞாம் ப்ரீதிர்ப⁴வதி மயிகோ(அ)ஹம் பஶுபதே
பஶும் மாம் ஸர்வஜ்ஞ ப்ரதி²த க்ருபயா பாலய விபோ⁴ ॥ 5 ॥

ஸ்ம்ருதிகள், சாஸ்த்ரங்கள், வைத்தியம், சகுன சாஸ்த்ரம், கவிதை, சங்கீதம், புராணங்கள், ஸ்தோத்ரம் செய்தல், நாட்டியம் செய்தல், ஹாஸ்யம் முதலியவை களில் நான் ஸாமர்த்யமற்றவன். என்னிடத்தில் பிரபுக்களுக்கு எவ்விதம் ப்ரீதி ஏற்படும்? ஹே பஶுபதே! விபூ! ஸர்வக்ஞ! ஒன்றும் அறியாத பசுவாகிய என்னைப் பிரஸித்தமான உன்னுடைய கிருபையினால் ரக்ஷித்து அருளவேண்டும்.

घटो वा मृत्पिण्डोऽप्यणुरपि च धूमोऽग्निरचलः
पटो वा तन्तुर्वा परिहरति किं घोरशमनम् ।
वृथा कण्ठक्षोभं वहसि तरसा तर्कवचसा
पदाम्भोजं शम्भोर्भज परमसौख्यं व्रज सुधीः ॥ ६ ॥

க⁴டோ வா ம்ருத்பிண்டோ³(அ)ப்யணுரபி ச தூ⁴மோ(அ)க்³நிரசல꞉
படோ வா தந்துர்வா பரிஹரதி கிம் கோ⁴ரஶமனம் ।
வ்ருதா² கண்ட²க்ஷோப⁴ம் வஹஸி தரஸா தர்கவசஸா
பதா³ம்போ⁴ஜம் ஶம்போ⁴ர்ப⁴ஜ பரமஸௌக்²யம் வ்ரஜ ஸுதீ⁴꞉ ॥ 6 ॥

ஹே நிர்மலமான புத்தியே! குடங்களோ, மண்ணினுடைய கார்யமோ, தவிர வும் அணுவோ, புகையோ, அக்னியோ மலையோ, வஸ்த்ரங்களோ, நூல்களோ இவை கள் பயங்கரமானதும் கோரமானதுமான யமபாதையைப் பரிஹாரம் செய்யக் கூடுமா? தர்க்க வார்த்தைகளால் வீண் கண்ட க்ஷோபத்தைத்தான் வகிக்கிறுய். சம்பு வினுடைய திருச்சரணாரவிந்தங்களை பஜனம் செய்வாயாக. பரமஸௌக்யமான மோக்ஷம் என்ற நிலையை அடைவாயாக. (வீண் தர்க்கங்களில் ஈடுபட்டு வீணாக கால ங்கழிக்காது பரமேஸ்வரனிடத்தில் பக்தி செலுத்த வேண்டும் என்றவாறு)

मनस्ते पादाब्जे निवसतु वचः स्तोत्रफणितौ
करौ चाभ्यर्चायां श्रुतिरपि कथाकर्णन विधौ ।
तव ध्याने बुद्धिः नयनयुगलं मूर्तिविभवे
परग्रन्थान् कैर्वा परमशिव जाने परमतः ॥ ७ ॥

**மனஸ்தே பாதா³ப்³ஜே நிவஸது வச꞉ ஸ்தோத்ரப²ணிதௌ**
**கரௌ சாப்⁴யர்சாயாம் ஶ்ருதிரபி கதா²கர்ணன விதௌ⁴ ।**
**தவ த்⁴யானே பு³த்³தி⁴꞉ நயனயுக³லம் மூர்திவிப⁴வே**
**பரக்³ரந்தா²ன் கைர்வா பரமஶிவ ஜானே பரமத꞉ ॥ 7 ॥**

ஹே பரமேஸ்வரனே! மனம் உன்னுடைய திருவடித் தாமரையிலும், வாக்கு உன்ஊனத் துதிப்பதிலும், இரு கரங்களும் உன்ஊன அர்ச்சஊன செய்வதிலும், காதுகள் உன்னுடைய கதையைக் கேட்பதிலும், புத்தி உன்னுடைய தியானத்திலும், இரு கண்களும் உன்னுடைய திவ்ய ரூபத்தைப் பார்ப்பதிலும் இருந்துவரட்டும். அப்படி இருந்தால் வேறு எந்த இந்த்ரியங்கஊளக் கொண்டு நான் அஸத் கார்யங்கஊள அறியப் போகிறேன்.

**यथा बुद्धिः शुक्तौ रजतमिति काचाश्मनि मणि**
**र्जले पैष्टे क्षीरं भवति मृगतृष्णासु सलिलम् ।**
**तथा देवभ्रान्त्या भजति भवदन्यं जडजनो**
**महादेवेशं त्वां मनसि च न मत्वा पशुपते ॥ ८ ॥**

**யதா² பு³த்³தி⁴꞉ ஶுக்தௌ ரஜதமிதி காசாஶ்மனி மணி**
**ர்ஜலே பைஷ்டே க்ஷீரம் ப⁴வதி ம்ருக³த்ரு'ஷ்ணாஸு ஸலிலம் ।**
**ததா² தே³வப்⁴ராந்த்யா ப⁴ஜதி ப⁴வத³ன்யம் ஜட³ஜனோ**
**மஹாதே³வேஶம் த்வாம் மனஸி ச ந மத்வா பஶுபதே ॥ 8 ॥**

ஹே மஹாதேவா! கிளிஞ்சஊல வெள்ளியென்றும் கண்ணுடிச்சில்ஊல வைரமெ ன்றும், மாவு கரைத்த ஜலத்தைப் பாலென்றும், கானல் நீரை ஜலமென்றும் புத்தியில் எவ்விதம் தோன்றுகிறதோ அவ்விதமே மூட ஜனம், ஹே பஶுபதே! ஸர்வேஶ்வர ஞன உன்ஊன மனதில் கூட நிஊனக்காமல் உனக்குவேறுன வஸ்துவை ஈஸ்வரன் என்று மயக்கத்திஞல் பஜிக்கின்றது.

**गभीरे कासारे विशति विजने घोरविपिने**
**विशाले शैले च भ्रमति कुसुमार्थं जडमतिः ।**
**समर्प्यैकं चेतः सरसिजमुमानाथ भवते**
**सुखेनावस्थातुं जन इह न जानाति किमहो ॥ ९ ॥**

**க³பீ⁴ரே காஸாரே விஶதி விஜனே கோ⁴ரவிபினே**
**விஶாலே ஶைலே ச ப்⁴ரமதி குஸுமார்த²ம் ஜட³மதி꞉ ।**
**ஸமர்ப்யைகம் சேத꞉ ஸரஸிஜமுமாநாத² ப⁴வதே**
**ஸுகே²னாவஸ்தா²தும் ஜன இஹ ந ஜானாதி கிமஹோ ॥ 9 ॥**

ஹே உமாபதே! ஜனங்கள் புஷ்பங்களுக்காக ஆழமான தடாகத்திலும், ஜன சஞ்சாரமற்ற பயங்கரமான காட்டிலும், விசாலமான மஊலயிலும் பிரவேசிக்கிருர்கள்.

சுற்றுகிறுர்கள். அவர்கள் விவேகமற்றவர்கள். தன்னுடைய மனம் என்ற ஒரே தாமரைப் புஷ்பத்தை உன்பொருட்டு அர்ப்பணம் செய்துவிட்டு இருந்தஇடத்திலேயே ஆனந்தமாக இருப்பதற்கு ஏன் இந்த லோகம் அறியவில்லை? ஆச்சர்யம்!

**नरत्वं देवत्वं नगवनमृगत्वं मशकता**
**पशुत्वं कीटत्वं भवतु विहगत्वादि जननम् ।**
**सदा त्वत्पादाब्जस्मरणपरमानन्दलहरी**
**विहारासक्तं चेद्धृदय मिह किं तेन वपुषा ॥ १० ॥**

**நரத்வம் தே³வத்வம் நக³வனம்ருக³த்வம் மஶகதா**
**பஶுத்வம் கீடத்வம் ப⁴வது விஹக³த்வாதி³ ஜனனம் ।**
**ஸதா³ த்வத்பாதா³ப்³ஜஸ்மரணபரமானந்த³லஹரீ**
**விஹாராஸக்தம் சேத்³த்⁴ருத³ய மிஹ கிம் தேன வபுஷா ॥ 10 ॥**

மனிதத்தன்மை, தேவத்தன்மை, மலைக்காடுகளில் மிருகங்களாக இருக்கும் தன்மை, கொசுவாக இருக்கும் தன்மை, பசு, புழு, பக்ஷியின் தன்மை, முதலிய எப் பிறப்பாவது உண்டாகட்டும். மனமானது எப்பொழுதும் உன்னுடைய தாமரைப் புஷ்பங்கள் போன்ற திருவடிகளை ஸ்மரணம் செய்வதினுல் உண்டாகும் ஆனந்த ப்ரவாஹத்தில் க்ரீடிப்பதில் ஆவல் உள்ளதாக மட்டும் இருக்கும் பக்ஷத்தில் அச்சரீர த்தினுல் வரக்கூடிய துக்கம் என்ன இருக்கிறது? (ஒன்றுமில்லை என்றவாறு)

**वटुर्वा गेही वा यतिरपि जटी वा तदितरो. :**
**नरो वा यः कश्चित् भवतु भव किं तेन भवति ।**
**यदीयं हृत्पद्मं यदि भवदधीनं पशुपते**
**तदीयस्त्वं शम्भो भवसि भवभारं च वहसि ॥ ११ ॥**

**வடுர்வா கே³ஹீ வா யதிரபி ஜடீ வா ததி³தரோ**
**நரோ வா ய꞉ கஶ்சித் ப⁴வது ப⁴வ கிம் தேன ப⁴வதி ।**
**யதீ³யம் ஹ்ருத்பத்³மம் யதி³ ப⁴வத³தீ⁴னம் பஶுபதே**
**ததீ³யஸ்த்வம் ஶம்போ⁴ ப⁴வஸி ப⁴வபா⁴ரம் ச வஹஸி ॥ 11 ॥**

ஹே பரமேர்வரனே! பிரம்மசாரியோ, கிரஹஸ்தனே, ஸன்யாஸியோ, ஜடை யோடு கூடிய பிரஸ்தனே, வேறு எந்த மனிதனேவாக இருக்கட்டும். அதனுல் என்ன? எவனுடைய ஹிருதயத் தாமரை உன்னுடைய வஶத்தில் இருக்குமானுல் ஹே ஸம்போ! நீ அவனைச் சேர்ந்தவனுக ஆகிறுய். அவனுடைய ஸம்ஸார பாரத் தையும் நீ வஹிக்கிறுய்.

**गुहायां गेहे वा बहिरपि वने वाऽद्रि शिखरे**
**जले वा वह्नौ वा वसतु वसतेः किं वद फलम् ।**
**सदा यस्यैवान्तः करणमपि शम्भो तव पदे**
**स्थितं चेद्योगोऽसौ स च परमयोगी स च सुखी ॥१२ ॥**

**கு³ஹாயாம் கே³ஹே வா ப³ஹிரபி வனேவா(அ)த்³ரி ஶிக²ரே**
**ஜலே வா வஹ்னௌ வா வஸது வஸதேः கிம் வத³ ப²லம் ।**
**ஸதா³ யஸ்யைவாந்தः கரணமபி ஶம்போ⁴ தவ பதே³**
**ஸ்தி²தம் சேத்³யோகோ³(அ)ஸௌ ஸ ச பரமயோகீ³ ஸ ச ஸுகீ² ॥ 12 ॥**

மலைக்குகை, வீடு, வெளி, காடு, மலைச்சிகரம், ஜலம், நெருப்பு. இவைகள் மீது வசிக்கட்டும். ஹே ஶம்போ! அவ்விதம் அவைகளில் வசிப்பதால் உண்டாகும் பலன் என்ன? சொல்வாயாக! எவனுடைய மனமுங்கூட ஸதா உன்னுடைய பாதார விந்தங்களிலேயே நிலைத் திருக்குமேயானால் அது தான் யோகம். அவன் தான் யோகி. அவனே தான் ஸுகத்தை அடைந்தவனாவான்.

**असारे संसारे निजभजनदूरे जडधिया**
**भ्रमन्तं मामन्धं परमकृपया पातुमुचितम् ।**
**मदन्यः को दीनस्तव कृपणरक्षातिनिपुण**
**स्त्वदन्यः को वा मे त्रिजगति शरण्यः पशुपते ॥ १३ ॥**

**அஸாரே ஸம்ஸாரே நிஜப⁴ஜனதூ³ரே ஜட³தி⁴யா**
**ப்⁴ரமந்தம் மாமந்த⁴ம் பரமக்ருபயா பாதுமுசிதம் ।**
**மத³ன்யः கோ தீ³னஸ்தவ க்ருபணரக்ஷாதிநிபுண**
**ஸ்த்வத³ன்யः கோ வா மே த்ரிஜக³தி ஶரண்யः பஶுபதே ॥ 13 ॥**

ஹே பஶுபதே! ஸாரமற்றதும் ஆத்மஸ்வரூபத்தை தியானம் செய்ய ப்ரஸக் தியேயில்லாமல் வெகு தூரத்தில் இருக்கின்றதுமான இந்த ஸம்ஸாரத்தில் அறிவி ன்மையால் சுழன்றுகொண்டு குருடனுயு மிருக்கிற என்னைப் பரம கருணையினுல் காப்பாற்றுவது உசிதமாகும். ஏனெனில் என்னைவிட உன்னல் ரக்ஷிக்கப்பட வேண் டிய எளியவன் எவன்? உன்னைத் தவிர வேறு எந்த தெய்வம் தீன ஜனங்களை ரக்ஷிப்பதில் சாமர்த்யமுடையது. எனக்கு ரக்ஷகன் மூன்று உலகிலும் யார் இருக்கி றுர்கள். (ஆகையால் நீயே ரக்ஷிக்க வேண்டும் என்றவாறு)

**प्रभुस्त्वं दीनानां खलु परमबन्धुः पशुपते**
**प्रमुख्योऽहं तेषामपि किमुत बन्धुत्वमनयोः ।**
**त्वयैव क्षन्तव्याः शिव मदपराधाश्च सकलाः**
**प्रयत्नात्कर्तव्यं मदवनमियं बन्धुसरणिः ॥ १४ ॥**

**ப்ரபு⁴ஸ்த்வம் தீ³னாம் க²லு பரமப³ந்து⁴: பஶுபதே**
**ப்ரமுக்²யோ(அ)ஹம் தேஷாமபி கிமுத ப³ந்து⁴த்வமனயோ: |**
**த்வயைவ க்ஷந்தவ்யா: ஶிவ மத³பராதா⁴ஶ்ச ஸகலா:**
**ப்ரயத்னாத்கர்தவ்யம் மத³வனமியம் ப³ந்து⁴ஸரணி: || 14 ||**

ஹே பஶுபதே! பிரபுவாகிய நீ தீன ஜனங்களுக்கு எல்லாம் மேலான பந்து என்பது பிரசித்தமானதல்லவா? அந்த தீன ஜனங்களுக்குள் நான் மிகவும் முக்கியமானவன். நமக்குள் இருக்கும் பந்துத்வத்தை விரித்துரைக்க வேண்டுமா? என்னுடைய சகலவிதமான குற்றங்களும் உன்னால்தான் க்ஷமிக்கத் தகுந்தவைகள். என்ஜன ரக்ஷிப்பதும் கூட நீ முயற்சியுடன் செய்ய வேண்டியதேயாகும். இதுதான் பந்துக்களுடைய கடமை ஆகும்.

**उपेक्षा नो चेत्किं न हरसि भवध्यानविमुखां**
**दुराशा भूयिष्ठां विधिलिपिमशक्तो यदि भवान् ।**
**शिरस्तद्वैधात्रं न नखलु सुवृत्तं पशुपते**
**कथं वा निर्यत्नं करनखमुखेनैव लुलितम् ॥ १५ ॥**

**உபேக்ஷா நோ சேத்கிம் ந ஹரஸி ப⁴வத்⁴யானவிமுகா²ம்**
**து³ராஶா பூ⁴யிஷ்டாம் விதி⁴லிபிமஶக்தோ யதி³ ப⁴வான் |**
**ஶிரஸ்தத்³வைதா⁴த்ரம் ந நக²லு ஸுவ்ருத்தம் பஶுபதே**
**கத²ம் வா நிர்யத்னம் கரநக²முகே²னைவ லுலிதம் || 15 ||**

ஹே பஸுபதே! என்னிடத்தில் உனக்கு வெறுப்பு இல்லாமலிருந்தால் துராஶா பூயிஷ்டமானதும் உன்னுடைய தியாநத்தினின்றும் வேறு முகமாயுமிருக்கின்ற பிரும்மாவினுல் எழுதப்பட்ட என் தலையெழுத்தை ஏன் அழிக்கவில்லை? தாங்கள் இத்தலையெழுத்தை அழிக்க சக்தியில்லாமல் இருந்தால், நகத்தினுல் கிள்ளமுடியாததும், கடினமானதுமான பிரம்மனுடைய ஐந்தாவது தலை எவ்விதம் உன்னுடைய கை நக நுனியால், சிறிதும் யத்னமில்லாமல் கிள்ளப்பட்டது.

**विरिञ्चिर्दीर्घायुर्भवतु भवता तत्परशिर-**
**श्चतुष्कं संरक्ष्यं स खलु भुवि दैन्यं लिखितवान् ।**
**विचारः को वा मां विशद कृपया पाति शिव ते**
**कटाक्षव्यापारः स्वयमपि च दीनावनपरः ॥ १६ ॥**

**விரிஞ்சிர்தீ³ர்கா⁴யுர்ப⁴வது ப⁴வதா தத்பரஶிர-**
**ஶ்சதுஷ்கம் ஸம்ரக்ஷ்யம் ஸ க²லு பு⁴வி தை³ன்யம் லிகி²தவான் |**
**விசார: கோ வா மாம் விஶத³ க்ருபயா பாதி ஶிவ தே**
**கடாக்ஷவ்யாபார: ஸ்வயமபி ச தீ³னாவனபர: || 16 ||**

ஹே ஶிவ! பிரம்மதேவன் தீர்க்காயுஸ்ஸாக இருக்கட்டும். அவரது மீதியுள்ள நான்கு தலைகளும் உன்னால் ரக்ஷிக்கப்பட்டவைகளாக ஆகட்டும். இப்புவியில் தீன பாபத்தை ஜனங்களின் தலையில் அந்த பிரம்மா எழுதிய விஷயம் மிக்கப்பிரசித்தி யானதன்றோ? தீனர்களைக் காப்பாற்றுவதில் விருப்பமுடைய உன்னுடைய கடாக்ஷத் தின் செயலன்றோ என்னைக் காப்பாற்றுகிறது. அங்ஙனமிருக்கும்போது விசாரம் எங்கேயிருக்கிறது? (இல்லை என்றவாறு)

**फलाद्वा पुण्यानां मयि करुणया वा त्वयि विभो**
**प्रसन्नेऽपि स्वामिन् भवदमलपादाब्जयुगलम् ।**
**कथं पश्येयं मां स्थगयति नमः संभ्रमजुषां**
**निलिम्पानां श्रेणिर्निजनक माणिक्यमकुटैः ॥ १७ ॥**

**ப²லாத்³வா புண்யானாம் மயி கருணயா வா த்வயி விபோ⁴**
**ப்ரஸன்னே(அ)பி ஸ்வாமின் ப⁴வத³மலபாதா³ப்³ஜயுக³லம் ।**
**கத²ம் பஶ்யேயம் மாம் ஸ்த²க³யதி நமः ஸம்ப்⁴ரமஜுஷாம்**
**நிலிம்பானாம் ஶ்ரேணிர்நிஜனக மாணிக்யமகுடை: ॥ 17 ॥**

ஹே ஸர்வ வ்யாபியான பரம்பொருளே! புண்யங்களின் பலத்தினாலோ அல்லது என்னிடத்தில் உள்ள கருணையினாலோ நீ அருள் புரிய பிரஸன்னமான போதிலும், ஹே ஸ்வாமின்! உன்னுடைய நிர்மலமான இரண்டு பாதாரவிந்தங்க ளையும் எப்படிக் காண்பேன்? உன் பாதங்களில் மிகுந்த அவஸரத்துடன் நமஸ்காரம் செய்து கொண்டிருக்கும் தேவர்களின் கூட்டங்களின் மாணிக்கத்தினால் இழைத்த தங்கக் கிரீடங்களின் ஜோதி என் கண்களின் பார்வையை மறைத்து என்னை நடுங்கச் செய்கிறதே!

**त्वमेको लोकानां परमफलदो दिव्यपदवीं**
**वहन्तस्त्वन्मूलां पुनरपि भजन्ते हरिमुखाः ।**
**कियद्वा दाक्षिण्यं तव शिव मदाशा च कियती**
**कदा वा मद्रक्षां वहसि करुणापूरित दृशा ॥ १८ ॥**

**த்வமேகோ லோகானாம் பரமப²லதோ³ தி³வ்யபத³வீம்**
**வஹந்தஸ்த்வன்மூலாம் புனரபி ப⁴ஜந்தே ஹரிமுகா²: ।**
**கியத்³வா தா³க்ஷிண்யம் தவ ஶிவ மதா³ஶா ச கியதீ**
**கதா³ வா மத்³ரக்ஷாம் வஹஸி கருணாபூரித த்³ருஶா ॥ 18 ॥**

ஹே ஶிவ! ஸகல லோகத்திற்கும் மேலான பலனான மோக்ஷத்தை அளிப்ப வன் நீ ஒருவன்தான். விஷ்ணு முதலிய தேவர்கள் உன்னால் கிடைத்த வைகுண்டம் முதலிய திவ்யபதவிகளை வஹித்துக்கொண்டு உன்னை பஜிக்கிறார்கள். உன்னுடைய தயைக்கு அளவில்லை. என்னுடைய ஆசையும் அத்தன்மையதே. கருணை நிரம்பிய திருஷ்டியினால் என்னைக்காப்பாற்றும் பொறுப்பை எப்போது வஹிக்கப் போகிறாய்?

दुराशाभूयिष्ठे दुरधिपगृहद्वारघटके
दुरन्ते संसारे दुरितनिलये दुःखजनके ।
मदायासं किं न व्यपनयसि कस्योपकृतये
वदेयं प्रीतिश्चेत्तव शिव कृतार्थाः खलु वयम् ॥ १९॥

து³ராஶாபூ⁴யிஷ்டே² து³ரதி⁴பக்³ருஹத்³வாரக⁴டகே
து³ரந்தே ஸம்ஸாரே து³ரிதநிலயே து³:க²ஜனகே ।
மதா³யாஸம் கிம் ந வ்யபனயஸி கஸ்யோபக்ருதயே
வதே³யம் ப்ரீதிஶ்சேத்தவ ஶிவ க்ருதார்தா²: க²லு வயம் ॥ 19 ॥

துராசையினுல் நிறைந்ததும், குணமற்ற துஷ்ட அரசர்கள் சேர்க்கையில் உழல்வதும், முடிவில்லாத துக்கத்திற்கும், மஹா பாபங்களுக்கும் இருப்பிடமானதும், துக்கத்தை உண்டு பண்ணுகிறதாயுமிருக்கிற ஸம்ஸாரத்தில் நான் படுகின்ற துயரத்தை பிரம்மாவுக்கு உபகாரம் செய்யும் பொருட்டு போக்கடிக்கவில்லையா? நீயே சொல், உனக்கு இந்த தீனர்களிடத்தில் அன்பு இருக்குமேயானுல் நாங்கள் எங்கள் ஜன்மாவைப் பிரயோஜனமுள்ளதாகச் செய்து கொண்டவர்களாக ஆகி விடுவோம் அல்லவா?

सदा मोहाटव्यां चरति युवतीनां कुचगिरौ
नटत्याशाशाखास्वटति झटिति स्वैरमभितः ।
कपालिन् भिक्षो मे हृदयकपिमत्यन्तचपलं
दृढं भक्त्या बध्वा शिव भवदधीनं कुरु विभो ॥ २०॥

ஸதா³ மோஹாடவ்யாம் சரதி யுவதீனும் குசகி³ரௌ
நடத்யாஶாஶாகா²ஸ்வடதி ஜ²டிதி ஸ்வைரமபி⁴த: ।
கபாலின் பி⁴க்ஷோ மே ஹ்ருத³யகபிமத்யந்தசபலம்
த்³ருட⁴ம் ப⁴க்த்யா ப³த்⁴வா ஶிவ ப⁴வத³தீ⁴னம் குரு விபோ⁴ ॥ 20 ॥

ஹே கபாலி! ஹே ஸ்ஸிவ!! ஹே விபோ!!! எப்பொழுதும் அஞ்ஞானம் என்ற வனத்திலே சஞ்சாரம் செய்வதும், யுவதிகளின் ஸ்தனங்களாகிய மலைகளில் நடனம் செய்வதும், பலவிதமான ஆசைகள் என்ற கிளைகளிலும் நாலா பக்கங்களிலும் வேகமாகத் தன்னிச்சைப்படி கட்டில்லாமல் அலைகின்றதும், சஞ்சலமுள்ளதுமான என்னுடைய மனம் என்னும் குரங்கை பக்தி என்கிற கயிறினால் த்ருடமாகக் கட்டி உன்வசமாகச் செய்து கொள்வாயாக.

धृतिस्तम्भाधारां दृढगुणनिबद्धां सगमनां
विचित्रां पद्माढ्यां प्रतिदिवससन्मार्गघटिताम् ।
स्मरारे मच्चेतः स्फुटपटकुटीं प्राप्य विशदां
जय स्वामिन् शक्त्या सह शिव गणैः सेवित विभो ॥ २१ ॥

**த்⁴ருதிஸ்தம்பா⁴தா⁴ராம் த்³ருட⁴கு³ணநிப³த்³தா⁴ம் ஸக³மனாம்**
**விசித்ராம் பத்³மாட்²யாம் ப்ரதிதி³வஸஸன்மார்க³க⁴டிதாம் ।**
**ஸ்மராரே மச்சேத: ஸ்பு²டபடகுடீம் ப்ராப்ய விஶதா³ம்**
**ஜய ஸ்வாமின் ஶக்த்யா ஸஹ ஶிவ க³ணை: ஸேவித விபோ⁴ ॥ 21 ॥**

காமனை எரித்தவனே! ஸ்வாமி, சிவ கணங்களால் ஸேவிக்கப்பட்டவனே! ஸர்வ வியாபியே! என்னுடைய த்ருடமான நிச்சயத்தைத் தூணக உடையதும், கெட்டியான ஸத்வ, ரஜஸ், தமோகுணங்களாகிய கயிறுகளால் கட்டப்பட்டதும் நினைத்த இடங்களுக்குச் செல்ல சக்தியுடையதும், விசித்ரங்கள் நிறைந்ததும், பணத்தாசையுடன் கூடியதுமான என்னுடைய மனதாகிய பிரகாசிக்கின்ற கூடாரத்தை நிர்மலமாகவும் நன் மார்க்கத்தில் சஞ்சரிக்கின்றதாயும் செய்து பராசக்தி யோடு கூட அடைந்து ஜயத்துடன் விளங்குவீராக.

**प्रलोभाद्यैरर्थाहरणपरतन्त्रो धनिगृहे**
**प्रवेशोद्युक्तस्सन् भ्रमति बहुधा तस्करपते ।**
**इमं चेतश्चोरं कथमिह सहे शङ्कर विभो**
**तवाधीनं कृत्वा मयि निरपराधे कुरु कृपाम् ॥ २२ ॥**

**ப்ரலோபா⁴த்³யைரர்தா²ஹரணபரதந்த்ரோ த⁴நிக்³ருஹே**
**ப்ரவேஶோத்³யுக்தஸ்ஸன் ப்⁴ரமதி ப³ஹுதா⁴ தஸ்கரபதே ।**
**இமம் சேதஶ்சோரம் கத²மிஹ ஸஹே ஶங்கர விபோ⁴**
**தவாதீ⁴னம் க்ருத்வா மயி நிரபராதே⁴ குரு க்ருபாம் ॥ 22 ॥**

ஹே சங்கரா! விபோ! தஸ்கர பதே! பேராசை முதலியவைகளால் பிறரது பணங்களைக் கொண்டு வருவதில் ஈடுபட்டுக் கொண்டு பணக்காரரது பணக்காரரது வீடுகளில் பிரவேசிக்க சமயம் பார்த்துக் கொண்டு பலவிதமாக சுற்றிக்கொண் டிருக்கிற இந்த என்னுடைய மனம் என்கிற திருடனை எப்படி நான் பொறுத்துக் கொள்வேன்? அவனை உன்னுடைய அதீனமாக்கிக் கொண்டு நிரபராதியான என்னிடத்தில் கருணை செய்வீராக.

**करोमि त्वत्पूजां सपदि सुखदो मे भव विभो**
**विधित्वं विष्णुत्वं दिशसि खलु तस्याः फलमिति ।**
**पुनश्च त्वां द्रष्टुं दिवि भुवि वहन्पक्षिमृगता**
**मदृष्ट्वा तत्खेदं कथमिह सहे शङ्कर विभो ॥ २३॥**

**கரோமி த்வத்பூஜாம் ஸபதி³ ஸுக²தோ³ மே ப⁴வ விபோ⁴**
**விதி⁴த்வம் விஷ்ணுத்வம் தி³ஶஸி க²லு தஸ்யா: ப²லமிதி ।**
**புனஶ்ச த்வாம் த்³ருஷ்டும் தி³வி பு⁴வி வஹன்பக்ஷிம்ருக³தா**
**மத்³ருஷ்ட்வா தத்கே²த³ம் கத²மிஹ ஸஹே ஶங்கர விபோ⁴ ॥ 23 ॥**

ஹே ஶங்கர விபோ! உன்னுடைய பூஜையைச் செய்கிறேன். எனக்கு ஸுகத்தையளிப்பவனுக இருப்பதுடன் அந்த பூஜைக்குப் பலனுக பிரம்மா, விஷ்ணு இவர்களின் பதவியைக் கொடுக்கின்றுய் அல்லவா? அப்பதவிகள் கிடைத்தால் உன்னுடைய தலையையும் பாதங்களையும் காண முறையே பக்ஷியாகவும் மிருகமாகவும் மறுபடியும் உருவமெடுத்து உன்னைக் காணுமல் அந்த துக்கத்தை எவ்விதம் ஸஹிப்பேன்?

**कदा वा कैलासे कनकमणिसौधे सहगणै-**
**र्वसन् शम्भोरग्रे स्फुटघटितमूर्धाञ्जलिपुटः ।**
**विभो साम्ब स्वामिन् परमशिव पाहीति निगदन्**
**विधातॄणां कल्पान् क्षणमिव विनेष्यामि सुखतः ॥ २४॥**

**கதா3 வா கைலாஸே கனகமணிஸெளதே4 ஸஹக3ணை-**
**ர்வஸன் ஶம்போ4ரக்3ரே ஸ்பு2டக4டிதமூர்தா4ஞ்ஜலிபுடः ।**
**விபோ4 ஸாம்ப3 ஸ்வாமின் பரமஶிவ பாஹீதி நிக3த3ன்**
**விதா4த்ரூணும் கல்பான் க்ஷணமிவ வினேஷ்யாமி ஸுக2தः ॥ 24 ॥**

ஹே விபோ! அம்பிகையுடன் கூடிய ஸ்வாமி!! பரமசிவ!!! கைலாஸத்தில் தங்கத்தினுலும் இரத்தினங்களாலும் இழைக்கப்பட்ட மேடையில் சம்புவினுடைய முன்னிலையில் சிவகணங்களுடன் கூட தலைக்குமேல் கூப்பப்பட்ட அஞ்சலி ஹஸ்தனுகவிருக்கின்ற நான் உன்னை ரக்ஷிப்பாய் என்று சொல்லிக் கொண்டு பிரம்மாக்களுடைய கல்பங்களை சுகமாக ஒரு க்ஷணத்தைப்போல் எப்பொழுதுதான் கழிப்பேனே?

**स्तवैर्ब्रह्मादीनां जयजयवचोभिर्नियमिनां**
**गणानां केलीभिर्मदकलमहोक्षस्य ककुदि ।**
**स्थितं नीलग्रीवं त्रिनयनमुमाश्लिष्टवपुषं**
**कदा त्वां पश्येयं करधृतमृगं खण्डपरशुम् ॥ २५॥**

**ஸ்தவைர்ப்3ரும்மாதீ3னாம் ஜயஜயவசோபி4ர்நியமினும்**
**க3ணுனும் கேலீபி4ர்மத3கலமஹோக்ஷஸ்ய ககுதி3 ।**
**ஸ்தி2தம் நீலக்3ரீவம் த்ரிநயனமுமாஶ்லிஷ்டவபுஷம்**
**கதா3 த்வாம் பஶ்யேயம் கரத்4ருதம்ருக3ம் க2ண்ட3பரஶும் ॥ 25 ॥**

பிரம்மாதிதேவர்கள் ஸ்துதி பாடவும், ரிஷிகள் ஜய ஜய என்று வாழ்த்தொலி கூறவும், சிவகணங்கள் ஆடிப் பாடவும். அழகிய பெரிய காளையின் மேல் வீற்றிருக்கின்ற நிலையிலே நீலகண்டனுகவும், மூன்று கண்களோடு கூடினவனுகவும், பார்வதிதேவியினுல் தழுவிக்கொள்ளப்பட்ட சரீரத்தையுடையவனாகவும், மான், மழு இவைகளை ஏந்திய கைகளையுடையவனுகவும் ஆன உன்னை நான் எப்பொழுது பார்ப்பேன்?

कदा वा त्वां दृष्ट्वा गिरिश तव भव्याङ्घ्रियुगलं
गृहीत्वा हस्ताभ्यां शिरसि नयने वक्षसि वहन् ।
समाश्लिष्याघ्राय स्फुटजलजगन्धान् परिमला-
नलभ्यां ब्रह्माद्यैर्मुदमनुभविष्यामि हृदये ॥ २६ ॥

கதா³ வா த்வாம் த்³ருஷ்ட்வா கி³ரிஶ தவ ப⁴வ்யாங்க்⁴ரியுக³லம்
க்³ருஹீத்வா ஹஸ்தாப்⁴யாம் ஶிரஸி நயனே வக்ஷஸி வஹன் ।
ஸமாஶ்லிஷ்யாக்⁴ராய ஸ்பு²டஜலஜக³ந்தா⁴ன் பரிமலா-
நலப்⁴யாம் ப்³ரஹ்மாத்³யைர்முத³மனுப⁴விஷ்யாமி ஹ்ருத³யே ॥ 26 ॥

மலையில் வசிக்கும் பெருமானே! உன்னைக் கண்களால் கண்டு உன்னுடைய இரண்டு பாதங்களையும் என்னுடைய இரு கரங்களாலும் பற்றிக் கொண்டு தலையிலும் கண்களிலும், மார்பிலும் அணைத்துக் கொண்டு, நன்கு அலர்ந்த தாமரை மலர்களின் வாசனையைக் கொண்ட அந்த பரிமளங்களை முகர்ந்து அனுபவித்து பிரம்மாதி தேவர்களுக்கும் அடையமுடியாத சிவானந்தத்தை எப்பொழுதுதான் என்னுடைய ஹ்ருதயத்தில் அனுபவிக்கப் போகிறேனோ?

करस्थे हेमाद्रौ गिरिश निकटस्थे धनपतौ
गृहस्थे स्वर्भूजाऽमरसुरभिचिन्तामणिगणे ।
शिरस्थे शीतांशौ चरणयुगलस्थेऽखिलशुभे
कमर्थं दास्येऽहं भवतु भवदर्थं मम मनः ॥ २७ ॥

கரஸ்தே² ஹேமாத்³ரௌ கி³ரிஶ நிகடஸ்தே² த⁴னபதௌ
க்³ருஹஸ்தே² ஸ்வர்பூ⁴ஜா(அ)மரஸுரபி⁴சிந்தாமணிக³ணே ।
ஶிரஸ்தே² ஶீதாம்ஶௌ சரணயுக³லஸ்தே²(அ)கி²லஶுபே⁴
கமர்த²ம் தா³ஸ்யே(அ)ஹம் ப⁴வது ப⁴வத³ர்த²ம் மம மன꞉ ॥ 27 ॥

ஹே மலையில் வஸிக்கும் பிரானே! உன்னுடைய கையிலே ஸ்வர்ணமலை; உன் ஸமீபத்திலே தனபதியான குபேரன், உன்னுடைய வீட்டிலே கல்பகவிருக்ஷம், காமதேனு. சிந்தாமணி இவைகளின் கூட்டம். தலையிலே குளுமையான அம்சமுள்ள சந்திரன், உன்னுடைய பாதார விந்தங்களிலே ஸகல மங்களங்கள், இவைகள் இருக்கும் போது எந்த வஸ்துவை நான் உனக்குத் தரப்போகிறேன். என்னுடைய மனம் உன்பொருட்டு ஆகட்டும். (இறைவனிடத்தில் நாம் செலுத்தக் கூடியது மனம் ஒன்று தான் என்பது கருத்து.)

सारूप्यं तव पूजने शिव महादेवेति सङ्कीर्तने
सामीप्यं शिवभक्तिधुर्यजनतासाङ्गत्यसम्भाषणे ।
सालोक्यं च चराचरात्मकतनुध्याने भवानीपते
सायुज्यं मम सिद्धमत्र भवति स्वामिन् कृतार्थोऽस्म्यहम् ॥ २८॥

**ஸாரூப்யம் தவ பூஜனே ஶிவ மஹாதே3வேதி ஸங்கீர்தனே**
**ஸாமீப்யம் ஶிவப4க்திது4ர்யஜனதாஸாங்க3த்யஸம்பா4ஷணே ।**
**ஸாலோக்யம் ச சராசராத்மகதனுத்4யானே ப4வானீபதே**
**ஸாயுஜ்யம் மம ஸித்3த4மத்ர ப4வதி ஸ்வாமின் க்ருதார்தோ2 (அ)ஸ்ம்யஹம் ॥ 28 ॥**

ஹே பவானீ பதியான பரமேஸ்வரனே! ஸாரூப்ய மோக்ஷம் உன்னுடைய பூஜையிலும், உன்னுடைய நாம ஸங்கீர்த்தனத்தில் ஸாமீப்ய மோக்ஷமும், சிவபக்தி நிரம்பின பக்தர்களுடன் சேர்க்கையிலும், அவர்களுடன் சம்பாஷிப்பதிலும் ஸாலோக்ய மோக்ஷமும், சராசராத் மகமான உன்னுடைய திருமேனி தியானத்தில் ஸாயுஜ்ய முக்தியும் எனக்கு சித்தியாகிறது. ஸ்வாமி! ஆகையினுல் இந்த ஜன்மாவிலேயே ஜன்ம மெடுத்ததன் பயஐன அடைந்தவஞக ஆகிறேன்.

**त्वत्पादाम्बुजमर्चयामि परमं त्वां चिन्तयाम्यन्वहं**
**त्वामीशं शरणं व्रजामि वचसा त्वामेव याचे विभो ।**
**वीक्षां मे दिश चाक्षुषीं सकरुणां दिव्यैश्चिरं प्रार्थितां**
**शम्भो लोकगुरो मदीयमनसः सौख्योपदेशं कुरु ॥ २९ ॥**

**த்வத்பாதா3ம்பு3ஜமர்சயாமி பரமம் த்வாம் சிந்தயாம்யன்வஹம்**
**த்வாமீஶம் ஶரணம் வ்ரஜாமி வசஸா த்வாமேவ யாசே விபோ4 ।**
**வீக்ஷாம் மே தி3ஶ சாக்ஷுஷீம் ஸகருணாம் தி3வ்யைஶ்சிரம் ப்ரார்தி2தாம்**
**ஶம்போ4 லோககு3ரோ மதீ3யமனஸः ஸௌக்2யோபதே3ஶம் குரு ॥ 29 ॥**

ஸர்வவியாபியே! சம்போ!! லோக குருவே!! மேலான உன்னுடைய தாமரைப் பாதங்களைப் பூஜை செய்கின்றேன். பிரதிதினமும் உன்ஐன மனத்தினுல் சிந்திக்கின்றேன். ஈஶனுன உன்ஐன அடைக்கலம் புகுகிறேன். வாக்கினுல் உன்ஐனயே யாசிக்கிறேன். தேவர்களால் பல காலமாகப் பிரார்த்திக்கப்பட்டதான கருஊணயோடு கூடிய கடாக்ஷ வீக்ஷண்யத்தை எனக்கு அருள்வாய். என்னுடைய மனதிற்கு - நித்திய சுகத்திற்கு - ஹேதுவான உபதேசத்தைச் செய்தருள்வாய்.

**वस्त्रोद्धूतविधौ सहस्रकरता पुष्पार्चने विष्णुता**
**गन्धे गन्धवहात्मताऽन्नपचने बर्हिर्मुखाध्यक्षता ।**
**पात्रे काञ्चनगर्भतास्ति मयि चेद् बालेन्दुचूडामणे**
**शुश्रूषां करवाणि ते पशुपते स्वामिन् त्रिलोकीगुरो ॥ ३०॥**

**வஸ்த்ரோத்3தூ4த்விதௌ4 ஸஹஸ்ரகரதா புஷ்ப்பார்சனே விஷ்ணுதா**
**க3ந்தே4 க3ந்த4வஹாத்மதா(அ)ன்னபசனே ப3ர்ஹிர்முகா2த்4யக்ஷதா ।**
**பாத்ரே காஞ்சநக3ர்ப4தாஸ்தி மயி சேத்3 பா3லேந்து3சூடா3மணே**
**ஶுஶ்ருஷாம் கரவாணி தே பஶுபதே ஸ்வாமின் த்ரிலோகீகு3ரோ ॥ 30 ॥**

பாலசந்திரனை ஆபரணமாகத் தலையிலணிந்துகொண்டிருப்பவனே! பஸுபதே!! ஸ்வாமீ!! மூன்று உலகங்களுக்கும் குருவே!! உனக்கு வஸ்த்ரம் உடுத்தி உபசரிக்க வேண்டுமானால் ஆயிரங் கிரணங்கள் உடைய சூரியனாக இருக்கும் தன்மையும், புஷ்பார்ச்சனை செய்யும் விஷயத்தில் மஹாவிஷ்ணுவின் தன்மையும், சந்தனம் அளிக்கும் விஷயத்தில் வாயு பகவானுடைய தன்மையும், அன்னம் முதலியவை களைப் பக்வம் செய்யும் விஷயத்தில் அக்னிமுகனான தேவேந்திரனுடைய தன்மை யும், தேவையான பாத்திரங்களைத் தயார்செய்யும் விஷயத்தில் ஹிரண்ய கர்ப்பனான பிரம்மதேவனுடைய தன்மையும் என்னிடம் இருக்குமேயானால் நான் உனக்கு ஸேவை செய்வேன். (ஸர்வ வியாபியான பரம்பொருளுக்குப் பூஜை செய்ய சாமான்ய ஜீவனால் இயலாது. சூரியன், விஷ்ணு முதலியவர்களின் தன்மையை அடைந்தால் மட்டுமே இயலும் என்பது கருத்து).

**नालं वा परमोपकारकमिदं त्वेकं पशूनां पते**
**पश्यन् कुक्षिगतान् चराचरगणान् बाह्यस्थितान् रक्षितुम् ।**
**सर्वामर्त्यपलायनौषधमतिज्वालाकरं भीकरं**
**निक्षिप्तं गरलं गले न गिलितं नोद्गीर्णमेव त्वया ॥ ३१॥**

**நாலம் வா பரமோபகாரக்மித்³ த்வேகம் பஶூனாம் பதே**
**பஶ்யன் குக்ஷிக³தான் சராசரக³ணான் பா³ஹ்யஸ்தி²தான் ரக்ஷிதும் ।**
**ஸர்வாமர்த்யபலாயனௌஷத⁴மதிஜ்வாலாகரம் பீ⁴கரம்**
**நிக்ஷிப்தம் க³ரலம் க³லே ந கி³லிதம் நோத்³கீ³ர்ணமேவ் த்வயா ॥ 31 ॥**

பசுக்களாகிய ஜீவன்களுக்குப் பதியே! நீ செய்த ஒரே ஒரு பரமோபகாரம் போதாதா? உன்னுடைய குக்ஷியிலே தங்கியிருக்கிற சராசரக் கூட்டங்களையும், வெளியிலிருக்கிறவைகளையும் காப்பாற்றுவதற்காக நீ ஜ்வாலையுடன் கூடியதும், பயங்கரமானதும், ஸகல தேவர்களையும் தங்கள் பிராணனைக் காத்துக்கொள்வத ற்காக ஓடச்செய்ததுமான ஆலாஹல விஷத்தைக் கண்டத்தில் வைத்துக் கொண்டாய். அது உன்னால் வெளியில் விடப்படவுமில்லை. கழுத்துக்குக் கீழே விழுங்கப் படவுமில்லை. (இறைவனது பெருங்கருணையை அறிய இச் செயல் ஒன்றே போதும் என்பது தாத்பர்யம்).

**ज्वालोग्रः सकलामरातिभयदः क्ष्वेलः कथं वा त्वया**
**दृष्टः किं च करे धृतः करतले किं पक्वजम्बूफलम् ।**
**जिह्वायां निहितश्च सिद्धघुटिका वा कण्ठदेशे भृतः**
**किं ते नीलमणिर्विभूषणमयं शम्भो महात्मन् वद ॥ ३२ ॥**

**ஜ்வாலோக்³ரஃ ஸகலாமராதிப்⁴யத³ஃ க்ஷ்வேலஃ கத²ம் வா த்வயா**
**த்³ருஷ்டஃ கிம் ச கரே த்⁴ருதஃ கரதலே கிம் பக்வஜம்பூ³ப²லம் ।**
**ஜிஹ்வாயாம் நிஹிதஶ்ச் ஸித்³த்⁴கு⁴டிகா வா கண்ட²தே³ஶே ப்⁴ருதஃ**
**கிம் தே நீலமணிர்விபூ⁴ஷணமயம் ஶம்போ⁴ மஹாத்மன் வத³ ॥ 32 ॥**

ஹே சம்போ! ஜ்வாலையுடன் கூடியதும், ஸகல தேவர்களுக்கும் பயத்தை உண்டு பண்ணியதுமான கொடிய விஷம் உன்னால் எப்படிப் பார்க்கப்பட்டது? கையினால் எங்ஙனம் தரிக்கப்பட்டது? அது உன்னுடைய உள்ளங்கையில் பழுத்த நாவற்பழமாக இருந்ததா? அல்லது உனது நாக்கிலே சித்தர்கள் வியாதிகளுக்கு உபயோகிக்கும் குளிகையாக இருந்ததா? அல்லது கழுத்தில் தரிக்கப்பட்டதே அது உனக்கு ஒரு நீல மணி ஆபரணமாக அமைந்ததா? ஓ மஹாத்மாவே! எனக்குச் சொல். (ஆலாஹல பானம் இறைவன் மிகக் கஷ்டப்பட்டு செய்த காரியம் அல்ல. தன்னால் சிருஷ்டிக்கப்பட்ட உயிர்க் கூட்டங்களின் நன்மைக்காக, விளையாட்டாகச் செய்த காரியம் என்றபடி).

**नालं वा सकृदेव देव भवतः सेवा नतिर्वा नुतिः**
**पूजा वा स्मरणं कथाश्रवणमप्यालोकनं मादृशाम् ।**
**स्वामिन्नस्थिरदेवतानुसरणायासेन किं लभ्यते**
**का वा मुक्तिरितः कुतो भवति चेत् किं प्रार्थनीयं तदा ॥ ३३॥**

**நாலம் வா ஸக்ருதே³வ தே³வ ப⁴வத꞉ ஸேவா நதிர்வா நுதி꞉**
**பூஜா வா ஸ்மரணம் கதா²ஶ்ரவணமப்யாலோகனம் மாத்³ருஶாம் ।**
**ஸ்வாமின்னஸ்தி²ரதே³வதானுஸரணாயாஸேன கிம் லப்⁴யதே**
**கா வா முக்திரித꞉ குதோ ப⁴வதி சேத் கிம் ப்ரார்த²னீயம் ததா³ ॥ 33 ॥**

ஹே ஸ்வாமி! தேவா!! என் போன்றவர்கள் உன் பொருட்டு நமஸ்காரமோ, தோத்திரமோ, பூஜையோ, தியானமோ, உன்னுடைய கதைகளைக் கேட்பதுவோ அல்லது உன்னுடைய மூர்த்தியைத் தர்சனம் செய்வதோ ஒரு முறையாவது செய்தால் போதாதா? இப்படி இல்லை யென்றால் மோக்ஷம் எங்ஙனம் கிட்டும்? இப்படி இவைகளில் ஏதாவது ஒன்றினால் மட்டுமே மோக்ஷம் கிடைக்குமானால் ஸ்திரமற்ற தேவதைகளை மிக்க சிரமத்துடன் வழிபடுவதால் என்ன பிரயோஜனம் அடைய முடியும்? அவைகளைப் பிரார்த்திக்க வேண்டியது எதற்காக? (அவைகளைப் பிரார்த்திக்க வேண்டியதில்லை என்பது கருத்து).

**किं ब्रूमस्तव साहसं पशुपते कस्यास्ति शम्भो भव-**
**द्धैर्यं चेदृशमात्मनः स्थितिरियं चान्यैः कथं लभ्यते ।**
**भ्रश्यद्देवगणं त्रसन्मुनिगणं नश्यत्प्रपञ्चं लयं**
**पश्यन्निर्भय एक एव विहरत्यानन्दसान्द्रो भवान् ॥ ३४॥**

**கிம் ப்³ரூமஸ்தவ் ஸாஹஸம் பஶுபதே கஸ்யாஸ்தி ஶம்போ⁴ ப⁴வ-**
**த்³தை⁴ர்யம் சேத்³ருஶமாத்மன꞉ ஸ்தி²திரியம் சான்யை꞉ கத²ம் லப்⁴யதே ।**
**ப்⁴ரஶ்யத்³தே³வக³ணம் த்ரஸன்முனிக³ணம் நஶ்யத்ப்ரபஞ்சம் லயம்**
**பஶ்யந்நிர்ப⁴ய ஏக ஏவ விஹரத்யானந்த³ஸாந்த்³ரோ ப⁴வான் ॥ 34 ॥**

ஹே சம்போ! பசுபதே!! உன்னுடைய ஸாஹஸத்தை என்னவென்று சொல்வோம்? இம்மாதிரி தைரியம் யாருக்கு இருக்கிறது? உன்னுடைய நிலையை மற்றவர்களால் எங்ஙனம் அடைய முடியும்? தங்களுடைய ஸ்தானங்களில் இருந்து விழுகிற தேவர்களின் கூட்டங்களையும், பயத்துடன் கூடிய முனிவர்களின் கூட்டங்களையும், நசிக்கின்ற பிரபஞ்சத்தையும் உடையதாகிய பிரளய காலத்தைப் பார்த்துக்கொண்டு நிர்ப்பயமாக நீ ஒருவனாகவே ஆனந்தத்துடன் கூடினவனாக விளையாடுகிறாய்.

**योगक्षेमधुरन्धरस्य सकलश्रेयःप्रदोद्योगिनो**
**दृष्टादृष्टमतोपदेशकृतिनो बाह्यान्तरव्यापिनः ।**
**सर्वज्ञस्य दयाकरस्य भवतः किं वेदितव्यं मया**
**शम्भो त्वं परमान्तरङ्ग इति मे चित्ते स्मराम्यन्वहम् ॥ ३५ ॥**

**யோக³க்ஷேமது⁴ரந்த⁴ரஸ்ய ஸகலஶ்ரேய:ப்ரதோ³த்³யோகி³னோ**
**த்³ருஷ்டாத்³ருஷ்டமதோபதே³ஶக்ருதினோ பா³ஹ்யாந்தரவ்யாபின: ।**
**ஸர்வஜ்ஞஸ்ய த³யாகரஸ்ய ப⁴வத: கிம் வேதி³தவ்யம் மயா**
**ஶம்போ⁴ த்வம் பரமாந்தரங்க³ இதி மே சித்தே ஸ்மராம்யன்வஹம் ॥ 35॥**

சம்புவே! நீ எல்லா ஜீவன்களுடையவுமான யோக க்ஷேமத்தைச் சுமக்கின்றாய். ஸகல விதமான நன்மைகளையும் கொடுக்க முற்படுகிறாய். கண்ணுக்குத் தெரிந்தவை, தெரியாதவைகளுமானவற்றை அடைய மார்க்கத்தை உபதேசிக்கின்றாய். உள்ளும் புறமும் வியாபித்து இருக்கின்றாய். நீ ஸகலமுமறிந்தவன். கருணைக்கு இருப்பிடம். உனக்குத் தெரியப்படுத்த வேண்டுவது என்றால் என்ன இருக்கிறது? நீ எனக்குப் பரம அந்தரங்கமானவன் என்பதை மட்டும் என்னுடைய மனதில் ஸதா ஸ்மரித்துக்கொண்டிருக்கிறேன்.

**भक्तो भक्तिगुणावृते मुदमृतापूर्णे प्रसन्ने मनः**
**कुम्भे साम्ब तवाङ्घ्रिपल्लवयुगं संस्थाप्य संवित्फलम् ।**
**सत्वं मन्त्रमुदीरयन्निजशरीरागारशुद्धिं वहन्**
**पुण्याहं प्रकटीकरोमि रुचिरं कल्याणमापादयन् ॥ ३६॥**

**ப⁴க்தோ ப⁴க்திகு³ணாவ்ருதே முத³ம்ருதாபூர்ணே ப்ரஸன்னே மன:**
**கும்பே⁴ ஸாம்ப³ தவாங்க்⁴ரிபல்லவயுக³ம் ஸம்ஸ்தா²ப்ய ஸம்வித்ப²லம் ।**
**ஸத்வம் மந்த்ரமுதீ³ரயந்நிஜஶரீராகா³ரஶுத்³தி⁴ம் வஹன்**
**புண்யாஹம் ப்ரகடீக்ரோமி ருசிரம் கல்யாணமாபாத³யன் ॥ 36 ॥**

ஹே ஸாம்ப! பக்தனாகிய நான் பக்தி என்னும் நூலினால் சுற்றப்பட்ட என்னுடைய மனம் என்னும் குடத்தில் ஆனந்தம் என்னும் ஜலத்தை நிரப்பி. உன்னுடைய இரண்டு பாதங்கள் என்னும் மாந்தளிர்களை அதில் வைத்து, அதன் மேல் ஞானமென்னும் தேங்காயை வைத்து, ஸத்வ குணத்தை வளர்க்கின்ற நல்ல

மந்திரங்களை உச்சரித்து, என்னுடைய சரீரத்தைச் சுத்திசெய்து கொள்ளவும். எனக்கு மங்களம் உண்டாவதற்கும் புண்யாஹம் என்ற கர்மாவைச் செய்கிறேன்.

**आम्नायाम्बुधिमादरेण सुमनस्सङ्घाः समुद्यन्मनो**
**मन्थानं दृढभक्तिरज्जुसहितं कृत्वा मथित्वा ततः ।**
**सोमं कल्पतरुं सुपर्वसुरभिं चिन्तामणिं धीमतां**
**नित्यानन्दसुधां निरन्तररमासौभाग्यमातन्वते ॥ ३७ ॥**

**ஆம்ஞாயாம்பு³தி⁴மாத்³ரேண் ஸுமனஸ்ஸங்கா⁴: ஸமுத்³யன்மனோ**
**மந்தா²னம் த்³ருட⁴ப⁴க்திரஜ்ஜுஸ்ஹிதம் க்ருத்வா மதி²த்வா தத: ।**
**ஸோமம் கல்பத்ரும் ஸுபர்வஸுர்பி⁴ம் சிந்தாமணிம் தீ⁴மதாம்**
**நித்யானந்த³ஸுதா⁴ம் நிரந்தரரமாஸௌபா⁴க்³யமாதன்வதே ॥ 37 ॥**

நிச்சயமான புத்தியை த்ருடமான பக்தி என்னும் கயிற்றுடன் கூடிய மத்தாகக் கொண்டு நல்ல மனமுடையவர்கள் வேதமாகிய சமுத்திரத்தைக் கடைகிறார்கள். அதிலிருந்து சோமன் (சந்திரன்), கல்பகவிருக்ஷம். காமதேனு, சிந்தாமணி, நித்யான ந்த மென்னும் அம்ருதம், நிரந்தர சுகம் என்னும் மோக்ஷம் ஆகிய எல்லாமாகவும் விளங்கும் ஸ்ரீ பரமேஸ்வரனை அடைகிறார்கள்.

**प्राक्पुण्याचलमार्गदर्शितसुधामूर्तिःप्रसन्नः शिवः**
**सोमः सद्गणसेवितो मृगधरः पूर्णस्तमोमोचकः ।**
**चेतः पुष्करलक्षितो भवति चेदानन्दपाथोनिधिः**
**प्रागल्भ्येन विजृम्भते सुमनसां वृत्तिस्तदा जायते ॥ ३८॥**

**ப்ராக்புண்யாசலமார்க³த³ர்ஶிதஸுதா⁴மூர்தி:ப்ரஸன்ன: ஶிவ:**
**ஸோம: ஸத்³க³ணஸேவிதோ ம்ருக³த⁴ர: பூர்ணஸ்தமோமோசக: ।**
**சேத: புஷ்கரலக்ஷிதோ ப⁴வதி சேதா³னந்த³பாதோ²நிதி⁴:**
**ப்ராக³ல்ப்⁴யேன விஜ்ரும்ப⁴தே ஸுமனஸாம் வ்ருத்திஸ்ததா³ ஜாயதே ॥38॥**

(சிவோதயம் ஒரு சந்த்ரோதயமாகக் கூறப்பட்டு உளது இந்த ஶ்லோகத்தில்)

**சந்திரோதயமாகப்பொருள்:** - பிரஸன்னமான, மங்களகரமான பூரணசந்திரன் நக்ஷத்திரக் கூட்டங்களுடன் ஒரு மிருகத்தின் உருவத்தை அங்கமாகக் கொண்டவனாக கிழக்குத்திக்கிலேயிருக்கிற உதயகிரியின் மார்க்கமாகத்தோன்றி இருளைப் போக்கடிப்பவனாக ஆகாயத்தில் காணப்பட்டால் அப்பொழுது ஆனந்தமயமான சமுத்ரம் பொங்குகிறது. அப்பொழுது நல்ல மனமுடையவர்களின் மனவிருத்தியிலே மாறுதல் உண்டாகிறது. அதாவது சந்த்ரோதயம் இருளைப் போக்குவது மட்டுமின்றி மனதிற்கு ஆனந்தத்தையும் உண்டு பண்ணுகிறது.

**சிவோதயமாகப்பொருள்**: - சாந்தமூர்த்தியும் மங்களகரனுமான சிவன், கையிலே மான் தாங்கி அம்ருத ஸ்வரூபனுக, நல்ல தேவதா கணங்களுடன் சூழப்பட்டவனுக, அஞ்ஞான மென்னும் இருளைப் போக்குபவனாக முன் செய்த மலைபோன்ற புண்யங்களின் காரணத்தால் மனமென்னும் ஆகாயத்தில் தோன்றினுல் அப்பொழுது ஆனந்தம் என்ற கடல் பொங்குகிறது. நல்லவர்களுடைய மனத்தில் ஒரு மாறுதல் உண்டாகிறது.,

**धर्मो मे चतुरङ्घ्रिकः सुचरितः पापं विनाशं गतं**
**कामक्रोधमदादयो विगलिताः कालाः सुखाविष्कृताः ।**
**ज्ञानानन्दमहौषधिः सुफलिता कैवल्यनाथे सदा**
**मान्ये मानसपुण्डरीकनगरे राजावतंसे स्थिते ॥ ३९ ॥**

**த⁴ர்மோ மே சதுரங்க்⁴ரிகః ஸுசரிதః பாபம் விநாஶம் க³தம்**
**காமக்ரோத⁴மதா³த³யோ விக³லிதாः காலாः ஸுகா²விஷ்க்ருதாः ।**
**ஜ்ஞானானந்த³மஹௌஷதி⁴ः ஸுப²லிதா கைவல்யநாதே² ஸதா³**
**மான்யே மானஸபுண்ட³ரீகநக³ரே ராஜாவதம்ஸே ஸ்தி²தே ॥ 39 ॥**

சந்த்ரனைத் தலையிலே அணிந்த பூஜிக்கத்தகுந்த பரமசிவன் என்னுடைய ஹிருதய கமலமாகிய நகரிலே நிலைபெற்று இருக்கும் பொழுது நான்கு பாதங்களை உடைய தர்மம் நன்கு அனுஷ்டிக்கப்படுகிறது. பாபம் நசித்துப் போகிறது. காமம், க்ரோதம், மதம் முதலியவைகள் என்னை விட்டு அகலுகின்றன. காலம் சுகத்தையே வெளிப்படுத்துகிறது. ஞானம், ஆனந்தம் என்ற ஓஷதிகள் நன்கு பலனைக் கொடுக்கின்றன.

**धीयन्त्रेण वचोघटेन कविताकुल्योपकुल्याक्रमै**
**रानीतैश्च सदाशिवस्य चरिताम्भोराशिदिव्यामृतैः ।**
**हृत्केदारयुताश्च भक्तिकलमाः साफल्यमातन्वते**
**दुर्भिक्षान् मम सेवकस्य भगवन् विश्वेश भीतिः कुतः ॥ ४० ॥**

**தீ⁴யந்த்ரேண வசோக⁴டேன கவிதாகுல்யோபகுல்யாக்ரமை**
**ரானீதைஶ்ச ஸதா³ஶிவஸ்ய சரிதாம்போ⁴ராஶிதி³வ்யாம்ருதைः ।**
**ஹ்ருத்கேதா³ரயுதாஶ்ச ப⁴க்திகலமாः ஸாப²ல்யமாதன்வதே**
**து³ர்பி⁴க்ஷான் மம ஸேவகஸ்ய ப⁴க³வன் விஶ்வேஶ பீ⁴திः குதः ॥ 40 ॥**

இவ்வுலகமனைத்துக்கும் ஈஶனான பகவானே! புத்தி என்னும் இயந்திரத்தினுல் வார்த்தையாகிற பாத்திரத்தைக் கொண்டு, கவிதையென்னும் வாய்க்கால்கள், சிறுவாய்க்கால்கள் வழியாகக் கொண்டுவரப்பட்டுப் பாய்ச்சப்படுகிற ஸதாஶிவனுடைய சரித்திரம் என்னும் சமுத்திரத்தின் திவ்ய ஜலத்தினுல் மனமென்னும் விளை நிலத்திலே பக்தியென்னும் பயிர் மிகவும் நன்ருகப் பலனைக் கொடுக்கிறது. ஆகவே உனது ஸேவகனுன எனக்கு துர்பிக்ஷத்தினுல் பயம் ஏது? (இல்லை என்பது கருத்து)

**पापोत्पातविमोचनाय रुचिरैश्वर्याय मृत्युञ्जय**
**स्तोत्रध्याननतिप्रदक्षिणसपर्यालोकनाकर्णने ।**
**जिह्वाचित्तशिरोङ्घ्रिहस्तनयनश्रोत्रैरहं प्रार्थितो**
**मामाज्ञापय तन्निरूपय मुहुर्मामेव मा मेऽवचः ॥ ४१ ॥**

**பாபோத்பாதவிமோசனாய ருசிரைஶ்வர்யாய ம்ருத்யுஞ்ஜய**
**ஸ்தோத்ரத்⁴யானனதிப்ரத³க்ஷிணஸபர்யாலோகனாகர்ணனே ।**
**ஜிஹ்வாசித்தஶிரோங்க்⁴ரிஹஸ்தநயனஶ்ரோத்ரைரஹம் ப்ரார்தி²தோ**
**மாமாஜ்ஞாபய தந்நிரூபய முஹுர்மாமேவ மா மே(அ)வச꞉ ॥ 41 ॥**

ஹே ம்ருத்யுஞ்ஜய! பாபங்களினுல் ஏற்படும் உபதிரவங்களைப் போக்கடித்துக் கொள்ளவும், மேலான ஐஶ்வர்யமாகிய பிரம்மானந்தத்தை அடைவதற்காகவும் ஸ்துதி, தியானம். நமஸ்காரம், பிரதக்ஷிணம், பூஜை, தரிசனம், கதாஸ்ரவணம் ஆகிய விஷயங்களில் முறையே நாக்கு, மனம், தலை, கால்கள், கைகள், கண்கள். காதுகள் இவைகளினுல் ஈடுபடுத்தப்பட்டவனுக இருக்கிறேன். நல்வழியை எனக்கு மீண்டும் மீண்டும் உபதேசித்து ஆக்ஞாபனம் செய். தக்ஷிணமூர்த்தியாக இருந்து அனுஷ்டித்த மௌனம் என் விஷயத்தில் வேண்டாம். (வாயைத் திறந்து உபதேசம் செய்க என்று வேண்டப்படுகிறது.)

**गाम्भीर्यं परिखापदं घनधृतिः प्राकार उद्यद्गुण-**
**स्तोमश्चाप्तबलं घनेन्द्रियचयो द्वाराणि देहे स्थितः ।**
**विद्यावस्तुसमृद्धिरित्यखिलसामग्रीसमेते सदा**
**दुर्गातिप्रियदेव मामकमनोदुर्गे निवासं कुरु ॥ ४२ ॥**

**கா³ம்பீ⁴ர்யம் பரிகா²பத³ம் க⁴னத்⁴ருதி꞉ ப்ராகார உத்³யத்³கு³ண-**
**ஸ்தோமஶ்சாப்தப³லம் க⁴னேந்த்³ரியசயோ த்³வாராணி தே³ஹே ஸ்தி²த꞉।**
**வித்³யாவஸ்துஸம்ருத்³தி⁴ரித்யகி²லஸாமக்³ரீஸமேதே ஸதா³**
**து³ர்கா³திப்ரியதே³வ மாமகமனோது³ர்கே³ நிவாஸம் குரு ॥ 42 ॥**

பர்வதத்தில் வசிக்கப்பிரியமுள்ளவனே! (துர்க்கையிடத்தில் பிரியமுள்ளவனே!) பிரகாசமான ரூபமுடையவனே! என்னுடைய மனம் ஒரு கோட்டை. அந்தக் கோட்டைக்கு காம்பீர்யமே அகழ். தைரியமே பிராகாரங்கள். மனதில் உண்டாகும் குணங்களின் கூட்டமே ஆப்தமான பலம், தேகத்தில் ஸ்திரமாக இருக்கின்ற இந்திரியங்களின் கூட்டமே வாயில்கள். வித்தை என்னும் வஸ்து அதிகமாய் இருக்கிறது. இப்படி ஒரு கோட்டைக்குத் தேவையான எல்லா ஸாமான்களும் கூடினதான இந்த மனமென்னும் கோட்டையிலே எப்பொழுதும் வஸிப்பாயாக.

**मा गच्छ त्वमितस्ततो गिरिश भो मय्येव वासं कुरु**
**स्वामिन्नादिकिरात मामकमनःकान्तारसीमान्तरे ।**
**वर्तन्ते बहुशो मृगा मदजुषो मात्सर्यमोहादय-**
**स्तान् हत्वा मृगयाविनोदरुचितालाभं च सम्प्राप्स्यसि ॥ ४३ ॥**

**மா க3ச்ச2 த்வமிதஸ்ததோ கி3ரிஶ போ4 மய்யேவ வாஸம் குரு**
**ஸ்வாமிந்நாதி3கிராத மாமகமனꞏகாந்தாரஸீமாந்தரே ।**
**வர்தந்தே ப3ஹுஶோ ம்ருகா3 மத3ஜுஷோ மாத்ஸர்யமோஹாத3ய-**
**ஸ்தான் ஹத்வா ம்ருக3யாவினோத3ருசிதாலாப4ம் ச ஸம்ப்ராப்ஸ்யஸி ॥ 43 ॥**

ஹே ஸர்வேஸ்வரா! ஆதி கிராதனே! மலையிலே வஸிப்பவனே! நீ வேட்டையாடுவதற்காக இங்கும் அங்கும் போகவேண்டாம். என்னிடத்திலேயே வஸிப்பாயாக. அன்னியர்களால் பிரவேசிக்கமுடியாத (அறிய முடியாத) என்னுடைய மனமாகிய அடர்ந்த காட்டிலே மிகுந்த மதம் கொண்ட, பொறாமை, மோஹம் முதலிய பலவித மிருகங்கள் அலைந்துகொண்டிருக்கின்றன. அவைகளையெல்லாம் இங்கு கொன்று வேட்டையாடுதலில் உனக்குள்ள ஆசையின் பலனை நன்றாகப் பெறுவாயாக.

**करलग्नमृगः करीन्द्रभङ्गो**
**घनशार्दूलविखण्डनोऽस्तजन्तुः ।**
**गिरिशो विशदाकृतिश्च चेतः-**
**कुहरे पञ्चमुखोस्ति मे कुतो भीः ॥ ४४ ॥**

**கரலக்3னம்ருக3ꞏ கரீந்த்3ரப4ங்கோ3**
**க4னஶார்தூ3லவிக2ண்ட3னோ(அ)ஸ்தஜந்துꞏ ।**
**கி3ரிஶோ விஶதா3க்ருதிஶ்ச சேதꞏ**
**குஹரே பஞ்சமுகோ2ஸ்தி மே குதோ பீ4ꞏ ॥ 44 ॥**

மானைக் கையில் வைத்துக்கொண் டிருப்பவனும், கஜாஸுரனை வதம் செய்தவனும், துஷ்ட வியாக்ராஸுரன் என்ற அசுரனைக் கொன்றவனும், நாசம் செய்யப்பட்ட ஸகல ப்ராணிகளையும் உடையவனுயும், மலையில் வசிப்பவனும், வெண்ணிறமுடையவனுமான, ஐந்து முகங்களையுடைய பரமேஸ்வரன் என்ற சிம்மம் என்னுடைய மனக் குகையில் வாஸம் செய்யும்பொழுது எனக்குப் பயம் எங்கிருந்து ஏற்படும்? (மற்ற எவரிடமிருந்தும் பயம் இல்லை என்றபடி.)

**छन्दःशाखिशिखान्वितैर्द्विजवरैः संसेविते शाश्वते**
**सौख्यापादिनि खेदभेदिनि सुधासारैः फलैर्दीपिते ।**
**चेतःपक्षिशिखामणे त्यज वृथासञ्चारमन्यैरलं**
**नित्यं शङ्करपादपद्मयुगलीनीडे विहारं कुरु ॥ ४५ ॥**

**ச2ந்த3:ஶாகி2ஶிகா2ன்விதைர்த்3விஜவரை: ஸம்ஸேவிதே ஶாஶ்வதே**
**ஸௌக்2யாபாதி3னி கே2த3பே4தி3னி ஸுதா4ஸாரை: ப2லைர்தீ3பிதே ।**
**சேத:பக்ஷிஶிகா2மணே த்யஜ வ்ருதா2ஸஞ்சாரமன்யைரலம்**
**நித்யம் ஶங்கரபாத3பத்3மயுக3லீனீடே3 விஹாரம் குரு ॥ 45 ॥**

மனமென்னும் சிறந்த பறவையே! நீ வீணுக அலேவதை விட்டுவிடு. அன்யர்களேத் தேடி அலேந்ததுபோதும். சங்கரனின் பாதபத்மங்களாகிய கூட்டில் எப்பொழுதும் தங்கி இருப்பாயாக. அந்த பாதபத்மங்கள் வேதாந்தங்களே நன்கு கற்றுணர்ந்த ப்ராம்மணோத்தமர்களால் ஆஸ்ரயிக்கப்படுவது. அது ஶாஶ்வதமானது. ஸௌக்யத்தை அளிப்பது. சிரமத்தைப் போக்கடிப்பது. அம்ருதப் பிரவாஹத்திற்குச் சமமான பலன்களால் பிரகாசிக்கிறது.

**आकीर्णे नखराजिकान्तिविभवैरुद्यत्सुधावैभवै-**
**राधौतेपि च पद्मरागललिते हंसव्रजैराश्रिते ।**
**नित्यं भक्तिवधूगणैश्च रहसि स्वेच्छाविहारं कुरु**
**स्थित्वा मानसराजहंस गिरिजानाथाङ्घ्रिसौधान्तरे ॥ ४६ ॥**

**ஆகீர்ணே நக2ராஜிகாந்திவிப4வைருத்3யத்ஸுதா4வைப4வை-**
**ராதௌ4தேபி ச பத்3மராக3லலிதே ஹம்ஸவ்ரஜைராஶ்ரிதே ।**
**நித்யம் ப4க்திவதூ4க3ணைஶ்ச ரஹஸி ஸ்வேச்சா2விஹாரம் குரு**
**ஸ்தி2த்வா மானஸராஜஹம்ஸ கி3ரிஜாநாதா2ங்க்4ரிஸௌதா4ந்தரே ॥ 46 ॥**

மனமென்னும் ராஜஹம்ஸமே! கிரிஜாநாதஞகிய பரமேஶ்வரனின் பாதமாகிய மாளிகையில் ரகஸ்யமாக இருந்துகொண்டு பக்தியாகிய ஸ்த்ரீகளின் கூட்டங்களுடன் உன் இஷ்டப்படி விளேயாடுவாயாக. அந்த பாதமாகிய மாளிகை நகங்களின் ஒளியினுல் பிரகாசப்படுத்தப்பட்டது. சந்திரனுடைய கிரணங்களினுல் வெள்ளேயடிக்கப்பட்டது. பத்மராக சிவப்புக் கற்களால் அழகு படுத்தப்பட்டது. ஸன்யாஸிகளாகிய அன்னப் பக்ஷிகளின் கூட்டத்தால் ஸேவிக்கப்பட்டது. (பரமேஶ்வரனின் பாதங்களில் மனது ஈடுபட வேண்டுமென்பதும் அப்பொழுது கிடைக்கக்கூடியதே ஆனந்தம் என்பதும் கருத்து).

**शम्भुध्यानवसन्तसङ्गिनि हृदारामेऽघजीर्णच्छदाः**
**स्रस्ता भक्तिलताच्छटा विलसिताः पुण्यप्रवालश्रिताः ।**
**दीप्यन्ते गुणकोरका जपवचःपुष्पाणि सद्वासना**
**ज्ञानानन्दसुधामरन्दलहरी संवित्फलाभ्युन्नतिः ॥ ४७ ॥**

**ஶம்பு4த்4யானவஸந்தஸங்கி3னி ஹ்ருதா3ராமே(அ)க4ஜீர்ணச்ச2தா3:**
**ஸ்ரஸ்தா ப4க்திலதாச்ச2டா விலஸிதா: புண்யப்ரவாலஶ்ரிதா: ।**
**தீ3ப்யந்தே கு3ணகோரகா ஜபவச:புஷ்பாணி ஸத்3வாஸனு**
**ஜ்ஞானனந்த3ஸுதா4மரந்த3லஹரீ ஸம்வித்ப2லாப்4யுன்னதி: ॥ 47 ॥**

சம்புத்யானமென்னும் வஸந்த ருதுவில், மனமென்னும் தோட்டத்தில், பாபங்களாகிய பழைய இலைகள் உதிர்ந்து புண்யங்களாகிய இளந்தளிர்களால் பிரகாசிக்கின்ற பக்தியென்னும் கொடிகளின் கூட்டமும், நற்குணங்களாகிய மொட்டுகளும், ஜப வார்த்தைகளாகிய புஷ்பங்களும், ஸத்வாஸனையும், ஞானம், ஆனந்தம் என்ற புஷ்பங்களின் அம்ருத ரஸப்பிரவாஹமும், ஆத்மக்ஞானமாகிய பழங்களும் நிரம்பி பிரகாசிக்கின்றன.

**नित्यानन्दरसालयं सुरमुनिस्वान्ताम्बुजाताश्रयं**
**स्वच्छं सद्द्विजसेवितं कलुषहृत्सद्वासनाविष्कृतम् ।**
**शम्भुध्यानसरोवरं व्रज मनो हंसावतंस स्थिरं**
**किं क्षुद्राश्रयपल्वलभ्रमणसञ्जातश्रमं प्राप्स्यसि ॥ ४८ ॥**

**நித்யானந்த³ரஸாலயம் ஸுரமுநிஸ்வாந்தாம்பு³ஜாதாஶ்ரயம்**
**ஸ்வச்ச²ம் ஸத்³த்³விஜஸேவிதம் கலுஷஹ்ருத்ஸத்³வாஸனாவிஷ்க்ருதம் ।**
**ஶம்பு⁴த்⁴யானஸரோவரம் வ்ரஜ மனோஹம்ஸாவதம்ஸ ஸ்தி²ரம்**
**கிம் க்ஷுத்³ராஶ்ரயபல்வலப்⁴ரமணஸஞ்ஜாதஶ்ரமம் ப்ராப்ஸ்யஸி ॥ 48 ॥**

ஹே மனமாகிய சிறந்த அன்னப்பக்ஷியே, தாழ்ந்தவர்களுக்குச் சேவை செய்தலாகிய சேற்றுக் குட்டைகளில் உழன்று ஏன் வீண் சிரமம் அடைகிறாய். ஸுகத்திற்கு உற்பத்தி ஸ்தானமாகிய பரமேச்வரனது த்யானமாகிய தடாகத்தை அடைவாய். அது நித்யானந்தமாகிய அம்ருதத்திற்கு இருப்பிடம். தேவர்கள், முனிவர்கள் ஆகியவர்களுடைய மனமென்னும் புஷ்பத்திற்கு ஆஶ்ரயமான இடம். நிர்மலமானது. சிறந்த பிராம்மணர்களால் ஸேவிக்கப்படுவது. பாபங்களாகிய அழுக்கைப் போக்கடித்து சுத்தமாக்கக்கூடியது. நல்ல வாஸனைகளை வெளிப்படுத்தக் கூடியது. (சம்பு தியானத்தின் பெருமை இங்கு கூறப்படுகிறது).

**आनन्दामृतपूरिता हरपदाम्भोजालवालोद्यता**
**स्थैर्योपघ्नमुपेत्य भक्तिलतिका शाखोपशाखान्विता ।**
**उच्चैर्मानसकायमानपटलीमाक्रम्य निष्कल्मषा**
**नित्याभीष्टफलप्रदा भवतु मे सत्कर्मसंवर्धिता ॥ ४९ ॥**

**ஆனந்தா³ம்ருதபூரிதா ஹரபதா³ம்போ⁴ஜாலவாலோத்³யதா**
**ஸ்தை²ர்யோபக்⁴னமுபேத்ய ப⁴க்திலதிகா ஶாகோ²பஶாகா²ன்விதா ।**
**உச்சை²ர்மானஸகாயமானபடலீமாக்ரம்ய நிஷ்கல்மஷா**
**நித்யாபீ⁴ஷ்டப²லப்ரதா³ ப⁴வது மே ஸத்கர்மஸம்வர்தி⁴தா ॥ 49 ॥**

ஆனந்தமென்னும் ஜலத்தினால் வளர்க்கப்பட்டதும், பரமேஶ்வரனின் திருவடிக் கமலங்கள் என்னும் பிரதேசத்திலிருந்து முளைத்து வளர்ந்ததும், ஸ்திரம் என்னும் ஊன்றுகோலையுடையதும், பெருங்கிளைகள், சிறுகிளைகளையுடையதாயும், சிறந்த மனமாகிய பந்தல்களில் படர்ந்துள்ளதாயும், குற்றமற்றதாயும், ஸத்கர்மாக்களினால்

மேன்மேலும் வளர்ந்து கொண்டிருக்கிறதாயும் இருக்கிற சிவபக்தி என்னும் கொடி எனக்கு நித்யமானதும், நான் எப்பொழுதும் அபேக்ஷிப்பதுமான மோக்ஷம் என்ற பலனைக் கொடுக்கட்டும்.

**सन्ध्यारम्भविजृम्भितं श्रुतिशिरस्थानान्तराधिष्ठितं**
**सप्रेमभ्रमराभिराममसकृत् सद्वासनाशोभितम् ।**
**भोगीन्द्राभरणं समस्तसुमनःपूज्यं गुणाविष्कृतं**
**सेवे श्रीगिरिमल्लिकार्जुनमहालिङ्गं शिवालिङ्गितं ॥ ५० ॥**

**ஸந்த்4யாரம்ப4விஜ்ரும்பி4தம் ஶ்ருதிஶிரஸ்தா2னாந்தராதி4ஷ்டி2தம்**
**ஸப்ரேமப்4ரமராபி4ராமமஸக்ருத் ஸத்3வாஸநாஶோபி4தம் ।**
**போ4கீ3ந்த்3ராப4ரணம் ஸமஸ்தஸுமன:பூஜ்யம் கு3ணாவிஷ்க்ருதம்**
**ஸேவே ஶ்ரீகி3ரிமல்லிகார்ஜுனமஹாலிங்க3ம் ஶிவாலிங்கி3தம் ॥ 50 ॥**

(ஆந்த்ர தேசத்தில் ஶ்ரீசைல க்ஷேத்திரத்திலுள்ள மஹா லிங்கத்தின் மஹிமை இந்த ஶ்லோகத்திலும் அடுத்த ஶ்லோகத்திலும் கூறப்படுகிறது. அந்தச் சிவாலயத்தில் பகவத் பாதர்கள் சிவானந்தலஹரீ கிரந்தத்தை அருளியதாக ஐதிஹ்யம்)

(மல்லி கார்ஜுன லிங்கத்துக்கும், மருத மரத்துக்கும் பொதுவான பொருள்).

**மருத மரத்துக்கு:** - ஸந்தியாகாலத்தில் புஷ்பிப்பதும், காதுகள், சிரஸ் இவைகளில் வைக்கப்படுவதும். தேனைப்பருகும் ஆவலுடைய வண்டுகளினுல் சூழப்பட்டு அழகுள்ளதாயும், எப்பொழுதும் நல்ல வாஸனையினுல் பிரகாசிக்கிறதாயும், ஸுகத்தை விரும்புபவர்களுக்கு அலங்காரமாயும், எல்லாப் புஷ்பங்களிலும் சிறந்ததும், குணங்களால் பிரசித்தியுடையதும், மங்களகரமானதும், அழகு வாய்ந்ததும், மலையில் இருக்கிற மல்லிகைக் கொடியினுல் சுற்றப்பட்டு இருக்கிற அர்ஜுனம் என்கிற மருதமரத்தை ஸேவிக்கிறேன்.

**மல்லிகார்ஜுன மஹாலிங்கத்துக்குப் பொருள்:** - ஸந்தியா காலத்தின் ஆரம்பத்தில் தாண்டவம் செய்பவனும், வேதாந்தங்களினுல் ஸ்தாபிக்கப்பட்டவனும். பிரேமையோடு கூடிய பிரமராம்பிகை என்னும் தேவியினுல் அழகுள்ளவனுயும், நல்ல மனமுடையவர்களின் தியானத்தில் பிரகாசிக்கின்றவனுயும், ஸர்ப்பங்களை ஆபரணங்களாக அணிந்தவனும், ஸகல தேவர்களாலும் பூஜிக்கப்படுபவனும், மேலான ஸத்வ குணத்தை வெளியிடுபவனுகவும், பார்வதி தேவியினுல் ஆலிங்கனம் செய்யப்பட்டவனுகவுமிருக்கிற ஶ்ரீ பர்வதத்தில் இருக்கிற மல்லிகார்ஜுன மஹாலிங்கத்தை ஸேவிக்கிறேன்.

**भृङ्गीच्छानटनोत्कटः करमदिग्राही स्फुरन्माधवा-**
**ह्लादो नादयुतो महासितवपुः पञ्चेषुणा चादृतः ।**
**सत्पक्षः सुमनोवनेषु स पुनः साक्षान्मदीये मनो-**
**राजीवे भ्रमराधिपो विहरतां श्रीशैलवासी विभुः ॥ ५१ ॥**

**ப்⁴ருங்கீ³ச்சா²னடனோத்கட: கரமதி³க்³ராஹீ ஸ்பு²ரன்மாத⁴வா-**
**ஹ்லாதோ³ நாத³யுதோ மஹாஸிதவபு: பஞ்சேஷுணா சாத்³ருத: ।**
**ஸத்பக்ஷ: ஸுமனோவனேஷு ஸ புன: ஸாக்ஷான்மதீ³யே மனோ-**
**ராஜீவே ப்⁴ரமராதி⁴போ விஹரதாம் ஶ்ரீஶைலவாஸீ விபு⁴: ॥ 51 ॥**

(பரமேஸ்வரனுக்கும் ஆண் வண்டுக்கும் சிலேஷை.)

**ஆண் வண்டாகப் பொருள்:** - பெண்வண்டின் இச்சையை அனுசரிப்பதில் பிரியமுள்ளதாயும், யானைகளின் மதநீரைப் பருகுவதாயும், வஸந்த ருதுவில் ஸந்தோஷத்தையுடையதாயும், ரீங்கார ஒலியை உண்டாக்குவதும், கறுத்த சரீரத்தை உடையதும், மன்மதனுக்குத் துணை செய்வதாயும், புஷ்பவனங்களில் காணப்படுவதும், நல்ல இறக்கைகளையுடையதும், கண்களுக்கு முன்னால் காணப்படுவதும், ஸ்ரீ ஶைலம் என்னும் மலையில் இருப்பதும், எங்கும் ஸஞ்சாரம் செய்யும் வல்லமை உள்ளதாயும் உள்ள ஆண் வண்டு (பரமேஸ்வரன்) என்னுடைய மனமாகிய தாமரைப் பூவில் விளையாடட்டும்.

**பரமேஸ்வரனாகப் பொருள்:** - ப்ருங்கி என்னும் மஹரிஷியின் இச்சையை அனுஸரித்து நடனம் செய்பவனும், கஜாஸுரனுடைய மதத்தை அடக்கினவனும், பிரகாசம் பொருந்திய மஹாவிஷ்ணுவினிடத்தில் பிரியம் உடையவனும், ஓங்கார நாதத்துடன் கூடினவனும், ஜோதிஸ்வரூபமான தேஹத்தை உடையவனும், மன்மதனால் ஆதரவாக அடையப் பட்டவனும், நல்லவர்களைக் காப்பாற்றுபவனும், மற்றும் நம் கண்களுக்கு எதிரில் காணப்படுபவனும், ஸ்ரீ சைலம் என்னும் மலையில் வஸிப்பவனும் பிரமராம்பிகை என்னும் தேவியின் நாதனுமான ஸ்ரீ பரமேஶ்வரன் என்னுடைய மனத்தாமரையில் விளையாடட்டும்.

**कारुण्यामृतवर्षिणं घनविपद्ग्रीष्मच्छिदाकर्मठं**
**विद्यासस्यफलोदयाय सुमनःसंसेव्यमिच्छाकृतिम् ।**
**नृत्यद्भक्तमयूरमद्रिनिलयं चञ्चज्जटामण्डलं**
**शम्भो वाञ्छति नीलकन्धर सदा त्वां मे मनश्चातकः ॥ ५२ ॥**

**காருண்யாம்ருதவர்ஷிணம் க⁴னவிபத்³க்³ரீஷ்மச்சி²தா³கர்மட²ம்**
**வித்³யாஸஸ்யப²லோத³யாய ஸுமன:ஸம்ஸேவ்யமிச்சா²க்ருதிம் ।**
**ந்ருத்யத்³ப⁴க்தமயூரமத்³ரிநிலயம் சஞ்சஜ்ஜடாமண்ட³லம்**
**ஶம்போ⁴ வாஞ்ச²தி நீலகந்த⁴ர ஸதா³ த்வாம் மே மனஶ்சாதக: ॥ 52 ॥**

ஹே மங்களத்தை அளிப்பவனே! நீலகண்டனாகிய நீருண்ட மேகமாகிய உன்னை என் மனமாகிய சாதகபக்ஷி எப்பொழுதும் இச்சிக்கிறது. நீ காருண்யம் என்ற அம்ருதத்தை வர்ஷிக்கிறாய். என்னுடைய பெரிய கஷ்டங்களாகிய தாபத்தைப் போக்குவதில் திறமுள்ளவனாக இருக்கிறாய். வித்தை என்னும் என்னும் பயிரை வளர்க்கும் பொருட்டு தேவர்களாலும். நன் மக்களாலும் ஸேவிக்கப்பட்டவனாக இருக்கிறாய். இச்சைக்குத் தகுந்தபடி உருவமெடுத்துக் கொள்கிறாய். நர்த்தனம் செய்கிற பக்த

கோடிகளாகிய மயில்களை உடையவனாக இருக்கிறாய். மலையில் வஸிக்கிறாய். அசைகின்ற ஜடைகளின் கூட்டமாகிய மின்னல்களை யுடையவனாக இருக்கிறாய்.

**आकाशेन शिखी समस्तफणिनां नेत्रा कलापी नता-**
**ऽनुग्राहिप्रणवोपदेशनिनदैः केकीति यो गीयते ।**
**श्यामां शैलसमुद्भवां घनरुचिं दृष्ट्वा नटन्तं मुदा**
**वेदान्तोपवने विहाररसिकं तं नीलकण्ठं भजे ॥ ५३ ॥**

**ஆகாஶேன ஶிகீ2 ஸமஸ்தப2ணினும் நேத்ரா கலாபீ நதா-**
**(அ)நுக்3ராஹிப்ரணவோபதே3ஶனினதை3: கேகீதி யோ கீ3யதே ।**
**ஶ்யாமாம் ஶைலஸமுத்3ப4வாம் க4னருசிம் த்3ருஷ்ட்வா நடந்தம் முதா3**
**வேதா3ந்தோபவனே விஹாரரஸிகம் தம் நீலகண்ட2ம் ப4ஜே ॥ 53 ॥**

ஆகாசமென்னும் கொண்டையையுடையவனும் நாகங்களுக்குத் தலைவனை ஆபரணமாக அணிபவனும், நமஸ்கரிப்பவர்களை அனுக்ரஹிக்கும் ப்ரணவ த்வனியாகிற 'கே கா' சப்தத்தை உடையவனும், பர்வதராஜனின் புத்ரியும் மேகத்தின் காந்தியையுடைய பார்வதி தேவியைப்பார்த்து ஆனந்தத்துடன் நடனம் செய்பவனும் வேதாந்தம் என்கிற உத்யான வனத்தில் விளையாடுவதில் விருப்பம் மிக்கவனுமான நீலகண்டன் என்ற மயிலை பஜிக்கிறேன்.

**सन्ध्याघर्मदिनात्ययो हरिकराघातप्रभूतानक-**
**ध्वानो वारिदगर्जितं दिविषदां दृष्टिच्छटा चञ्चला ।**
**भक्तानां परितोषबाष्पविततिर्वृष्टिर्मयूरी शिवा**
**यस्मिन्नुज्ज्वलताण्डवं विजयते तं नीलकण्ठं भजे ॥ ५४ ॥**

**ஸந்த்4யாக4ர்மதி3னுத்யயோ ஹரிகராகா4தப்ரபூ4தானக-**
**த்4வானோ வாரித3க3ர்ஜிதம் தி3விஷதா3ம் த்3ருஷ்டிச்ச2டா சஞ்சலா ।**
**ப4க்தானும் பரிதோஷபா3ஷ்பவிததிர்வ்ருஷ்டிர்மயூரீ ஶிவா**
**யஸ்மின்னுஜ்வலதாண்ட3வம் விஜயதே தம் நீலகண்ட2ம் ப4ஜே ॥ 54 ॥**

ஸந்த்யா என்பது கோடைகாலத்தின் முடிவாகவும் மஹா விஷ்ணுவினால் அடிக்கப்பட்டு உண்டாகிற ஶப்தமே மேகங்களின் கர்ஜனையாகவும் தேவர்களின் கண்களின் வரிசையே மின்னலாகவும் பக்தர்களின் ஆனந்தக்கண்ணீர்ப் பெருக்கே மழையாகவும் பார்வதி தேவியே பெண் மயிலாகவும் கொண்டு எவரிடத்தில் ஜாஜ்வல்யமான தாண்டவம் சிறந்து விளங்குகின்றதோ அந்த நீலகண்டன் என்ற மயிலை நான் பஜிக்கிறேன்.

**आद्यायामिततेजसे श्रुतिपदैर्वेद्याय साध्याय ते**
**विद्यानन्दमयात्मने त्रिजगतः संरक्षणोद्योगिने ।**
**ध्येयायाखिलयोगिभिः सुरगणैर्गेयाय मायाविने**
**सम्यक्ताण्डवसम्भ्रमाय जटिने सेयं नतिः शम्भवे ॥ ५५ ॥**

**ஆத்³யாயாமிததேஜஸே ஶ்ருதிபதை³ர்வேத்³யாய ஸாத்⁴யாய தே**
**வித்³யானந்த³மயாத்மனே த்ரிஜக³தః ஸம்ரக்ஷணோத்³யோகி³னே ।**
**த்⁴யேயாயாகி²லயோகி³பி⁴ஃ ஸுரக³ணைர்கே³யாய மாயாவினே**
**ஸம்யக்தாண்ட³வஸம்ப்⁴ரமாய ஜடினே ஸேயம் நதிஃ ஶம்ப⁴வே ॥ 55 ॥**

எல்லா ஜகத்துக்கும் ஆதிகாரணமானவனும், அளவுக்கடங்காத தேஜஸ் உடையவனும், வேதங்களினுலே அறியப்படுபவனும், தேடி அடையவேண்டிய பொருளாக இருப்பவனும் ஞானம் ஆனந்தம் என்பவைகளாக இருப்பவனும், மூன்று லோகங்களையும் ரக்ஷிப்பதில் தீர்மானம் உடையவனும், யோகிகளுடைய த்யானத்திற்கு லக்ஷியமாக அமைந்தவனும், தேவர்களுடைய கூட்டங்களினுலே ஸ்தோத்திரம் செய்யப்படுபவனும், மாயையைத் தன் வசத்தில் வைத்திருப்பவனும், நன்ருகத் தாண்டவம் செய்வதிலே விருப்பம் உள்ளவஞகவும் இருக்கிற ஜடைகள் தரித்த சம்புவே! என்னுடைய இந்த நமஸ்காரம் உன் பொருட்டு ஆகட்டும்.

**नित्याय त्रिगुणात्मने पुरजिते कात्यायनीश्रेयसे**
**सत्यायादिकुटुम्बिने मुनिमनः प्रत्यक्षचिन्मूर्तये ।**
**मायासृष्टजगत्त्रयाय सकलाम्नायान्तसञ्चारिणे**
**सायं ताण्डवसम्भ्रमाय जटिने सेयं नतिः शम्भवे ॥ ५६ ॥**

**நித்யாய த்ரிகு³ணாத்மனே புரஜிதே காத்யாயனீஶ்ரேயஸே**
**ஸத்யாயாதி³குடும்பி³னே முனிமனஃ ப்ரத்யக்ஷசின்மூர்தயே ।**
**மாயாஸ்ருஷ்டஜக³த்த்ரயாய ஸகலாம்னாயாந்தஸஞ்சாரிணே**
**ஸாயம் தாண்ட³வஸம்ப்⁴ரமாய ஜடினே ஸேயம் நதிஃ ஶம்ப⁴வே ॥ 56 ॥**

நித்யமானவனும், மூன்று குணங்களை சரீரமாக உடையவனும், முப்புரங்களை ஜெயித்தவனும், பார்வதீ தேவிக்கு ஶ்ரேயஸ்ஸாகயிருப்பவனும், ஸத்யஸ்வரூபனும் ஆதி குடும்பியும், முனிவர்களுடைய மனத்திலே ப்ரத்யக்ஷமாக விளங்குகின்ற ஞான ஸ்வரூபனும், மாயையினுலே மூன்று உலகையும் ஸ்ருஷ்டித்தவனும், ஸகல உபநிஷத்துக்களில் ஸஞ்சரிக்கின்றவனும், சாயங்காலத்தில் தாண்டவம் செய்வதில் விருப்பமுள்ளவஞகவும், ஜடாதாரியாகவும் இருக்கின்ற அப்படிப்பட்ட சம்புவின் பொருட்டு இந்த நமஸ்காரம் ஆகட்டும்.

नित्यं स्वोदरपूरणाय सकलानुद्दिश्य वित्ताशया
व्यर्थं पर्यटनं करोमि भवतः सेवां न जाने विभो ।
मज्जन्मान्तरपुण्यपाकबलतस्त्वं शर्व सर्वान्तर-
स्तिष्ठस्येव हि तेन वा पशुपते ते रक्षणीयोऽस्म्यहम् ॥ ५७ ॥

நித்யம் ஸ்வோத³ரபூரணாய ஸகலானுத்³தி³ஶ்ய வித்தாஶயா
வ்யர்த²ம் பர்யடனம் கரோமி ப⁴வத꞉ ஸேவாம் ந ஜானே விபோ⁴ ।
மஜ்ஜன்மாந்தரபுண்யபாகப³லதஸ்த்வம் ஶர்வ ஸர்வாந்தர-
ஸ்திஷ்ட²ஸ்யேவ ஹி தேன வா பஶுபதே தே ரக்ஷணீயோ(அ)ஸ்ம்யஹம் ॥ 57 ॥

ஹே பசுபதே! ஹே விபோ! பண ஆசையினுலும், என்னுடைய வயிற்றை வளர்க்கும் பொருட்டும், எல்லோரையும் உத்தேசித்து வீணுகத் திரிகிறேன். உன்னுடைய பூஜையை நான் அறிவதில்லெ. முன் ஜன்மாந்தரங்களிலே செய்த புண்யங்களின் பலத்தினுல் நீ ஸர்வாந்தர ரூபியாகத் தங்கி இருக்கிறுய். ஆகையினுலே நான் உன்னுல் காப்பாற்றத் தகுந்தவனுக ஆகிறேன்.

एको वारिजबान्धवः क्षितिनभो व्याप्तं तमोमण्डलं
भित्वा लोचनगोचरोऽपि भवति त्वं कोटिसूर्यप्रभः ।
वेद्यः किन्न भवस्यहो घनतरं कीदृग्भवेन्मत्तम-
स्तत्सर्वं व्यपनीय मे पशुपते साक्षात् प्रसन्नो भव ॥ ५८ ॥

ஏகோ வாரிஜபா³ந்த⁴வ꞉ க்ஷிதினபோ⁴ வ்யாப்தம் தமோமண்ட³லம்
பி⁴த்வா லோசனகோ³சரோ(அ)பி ப⁴வதி த்வம் கோடிஸூர்யப்ரப⁴꞉ ।
வேத்³ய꞉ கின்ன ப⁴வஸ்யஹோ க⁴னதரம் கீத்³ருக்³ப⁴வேன்மத்தம-
ஸ்தத்ஸர்வம் வ்யபனீய மே பஶுபதே ஸாக்ஷாத் ப்ரஸன்னோ ப⁴வ ॥ 58 ॥

ஹே பசுபதியே! தாமரையின் நாயகனுன ஸூரியன் ஒருவனுக இருந்தும் பூமி, ஆகாசம் இவைகளெ வியாபித்துக்கொண்டிருக்கும் இருள்மண்டலத்தைப் போக்குகிறுன். அத்துடன் கண்களுக்கும் தெரிகிறுன். நீயோ கோடி ஸூர்யப் பிரகாசம் பொருந்தியவன். அப்படியிருந்தும் ஏன் கண்களுக்குத் தெரிவதில்லெ? என்னுடைய அக்ஞானமாகிய இருள் எவ்வளவு கனமாகயிருக்கவேண்டும்? நீ அதை முற்றிலும் அழித்து என் கண்களுக்குமுன் பிரஸன்னமாவாய்.

हंसः पद्मवनं समिच्छति यथा नीलाम्बुदं चातकः
कोकः कोकनदप्रियं प्रतिदिनं चन्द्रं चकोरस्तथा ।
चेतो वाञ्छति मामकं पशुपते चिन्मार्गमृग्यं विभो
गौरीनाथ भवत्पदाब्जयुगलं कैवल्यसौख्यप्रदम् ॥ ५९ ॥

**ஹம்ஸ꞉ பத்³மவனம் ஸமிச்ச²தி யதா² நீலாம்பு³த³ம் சாதக꞉**
**கோக꞉ கோகனத³ப்ரியம் ப்ரதிதி³னம் சந்த்³ரம் சகோரஸ்ததா² ।**
**சேதோ வாஞ்ச²தி மாமகம் பஶுபதே சின்மார்க³ம்ருக்³யம் விபோ⁴**
**கௌ³ரீநாத² ப⁴வத்பதா³ப்³ஜயுக³லம் கைவல்யஸௌக்²யப்ரத³ம் ॥ 59 ॥**

ஹே பசுபதே, கௌரீ நாதா, ஹம்ஸப் பறவை பத்மங்கள் நிரம்பிய தடாகத்தையும், சாதகப் பறவைகள் கறுத்த நீருண்ட மேகத்தையும், சக்ரவாகப்பக்ஷி ஸூரியனையும், சகோரப் பறவை சந்திரனையும் இச்சிக்கின்றது. அதுபோல என்னுடைய மனம் ஞான மார்க்கத்தினால் அடையக்கூடியதும், மோக்ஷம் என்ற ஸௌக்யத்தை அளிக்கக்கூடியதுமான உன்னுடைய பாதத்தாமரைகளை இச்சிக்கிறது.

**रोधस्तोयहृत: श्रमेण पथिकश्छायां तरोर्वृष्टितो**
**भीत: स्वस्थगृहं गृहस्थमतिथिर्दीन: प्रभुं धार्मिकम् ।**
**दीपं सन्तमसाकुलश्च शिखिनं शीतावृतस्त्वं तथा**
**चेत: सर्वभयापहं व्रज सुखं शम्भो: पदाम्भोरुहम् ॥ ६० ॥**

**ரோத⁴ஸ்தோயஹ்ருத꞉ ஶ்ரமேண பதி²கஶ்சா²யாம் தரோர்வ்ருஷ்டிதோ**
**பீ⁴த꞉ ஸ்வஸ்த²க்³ருஹம் க்³ருஹஸ்த²மதிதி²ர்தீ³ன꞉ ப்ரபு⁴ம் தா⁴ர்மிகம் ।**
**தீ³பம் ஸந்தமஸாகுலஶ்ச ஶிகி²னம் ஶீதாவ்ருதஸ்த்வம் ததா²**
**சேத꞉ ஸர்வப⁴யாபஹம் வ்ரஜ ஸுக²ம் ஶம்போ⁴꞉ பதா³ம்போ⁴ருஹம் ॥60॥**

ஹே மனமே, ஜலத்தின் வேகத்தினால் இழுக்கப்பட்ட மனிதன் கரையை அடைவதையும், களைப்படைந்த வழிப் போக்கன் மரத்தின் நிழலையும், மழைக்குப் பயந்தவன் தன்னுடைய வீட்டையும், விருந்தாளி இல்லறத்தானையும், ஏழையானவன் தார்மீகப் பிரபுவையும், அடர்ந்த இருட்டிலே துயர் உறுபவன் தீபத்தையும், குளிராலும் பனியாலும் பீடிக்கப்பட்டவன் அக்னியையும் எவ்விதம் சரணமடைகிறானோ அதேபோல எல்லாவிதமான பயங்களைப் போக்கடிக்கக் கூடிய சுகத்திற்கு உற்பத்தி ஸ்தானமான பரமேஸ்வரனின் பாதாரவிந்தங்களை ஶரணம் அடைவாய்.

**अङ्कोलं निजबीजसन्ततिरयस्कान्तोपलं सूचिका**
**साध्वी नैजविभुं लता क्षितिरुहं सिन्धु: सरिद्वल्लभम् ।**
**प्राप्नोतीह यथा तथा पशुपते: पादारविन्दद्वयं**
**चेतोवृत्तिरुपेत्य तिष्ठति सदा सा भक्तिरित्युच्यते ॥ ६१ ॥**

**அங்கோலம் நிஜபீ³ஜஸந்ததிரயஸ்காந்தோபலம் ஸூசிகா**
**ஸாத்⁴வீ நைஜவிபு⁴ம் லதா க்ஷிதிருஹம் ஸிந்து⁴꞉ ஸரித்³வல்லப⁴ம் ।**
**ப்ராப்னோதீஹ யதா² ததா² பஶுபதே꞉ பாதா³ரவிந்த³த்³வயம்**
**சேதோவ்ருத்திருபேத்ய திஷ்ட²தி ஸதா³ ஸா ப⁴க்திரித்யுச்யதே ॥ 61 ॥**

அங்கோல மென்ற மரத்தின் விதைகள் அம்மரத்திலேயே சென்று அடைவது போலவும், ஊசி காந்தக் கல்லில் ஒட்டிக்கொள்வது போலவும் கற்புடையமங்கை தன்னுடைய கணவனையே ஸதா காலமும் அனுசரிப்பது போலவும் ஆறுகள் சமுத்திரத்தைச் சென்று அடைவதைப் போலவும், இந்த மநத்தினுடைய விருத்திகள் உயிர்க்கூட்டங்களுக்கெல்லாம் தலைவனான பரமேஸ்வரனுடைய பாதாரவிந்தங்களில் சென்று அடைந்து அங்கு ஸதாகாலமும் நிலைத்திருக்குமானால் அதுவே பக்தி என்று கூறப்படும்.

**आनन्दाश्रुभिरातनोति पुलकं नैर्मल्यतच्छादनं**
**वाचा शङ्खमुखे स्थितैश्च जठरापूर्तिं चरित्रामृतैः ।**
**रुद्राक्षैर्भसितेन देव वपुषो रक्षां भवद्भावना-**
**पर्यङ्के विनिवेश्य भक्तिजननी भक्तार्भकं रक्षति ॥ ६२ ॥**

**ஆனந்தா3ஶ்ருபி4ராதனோதி புலகம் நைர்மல்யதச்சா2த3னம்**
**வாசா ஶங்க2முகே2 ஸ்தி2தைஶ்ச ஜட2ராபூர்திம் சரித்ராம்ருதை: ।**
**ருத்3ராக்ஷைர்ப4ஸிதேன தே3வ வபுஷோ ரக்ஷாம் ப4வத்3பா4வனா-**
**பர்யங்கே விநிவேஶ்ய ப4க்திஜனனீ ப4க்தார்ப4கம் ரக்ஷதி ॥ 62 ॥**

ஹே தேவா, பக்தி என்னும் தாய் பக்தனாகிய குழந்தையை ஆனந்தக் கண்ணீரால் ஸ்நானம் செய்வித்து நிர்மலத்வம் என்கிற ஆடையை உடுத்தி வாக்கு என்கிற சங்கினால் உன்னுடைய சரித்ராம்ருதம் என்கிற உணவை ஊட்டி உருத்ராக்ஷங்களினாலும் விபூதியினாலும் ரக்ஷைசெய்து) உன்னுடைய த்யானமாகிற தொட்டிலில் படுக்கச் செய்து காப்பாற்றுகிறாள்.

**मार्गावर्तितपादुका पशुपतेरङ्गस्य कूर्चायते**
**गण्डूषाम्बुनिषेचनं पुररिपोर्दिव्याभिषेकायते ।**
**किञ्चिद्भक्षितमांसशेषकबलं नव्योपहारायते**
**भक्तिः किं न करोत्यहो वनचरो भक्तावतंसायते ॥ ६३ ॥**

**மார்கா3வர்திதபாது3கா பஶுபதேரங்க3ஸ்ய கூர்சாயதே**
**க3ண்டூ3ஷாம்பு3நிஷேசனம் புரரிபோர்தி3வ்யாபி4ஷேகாயதே ।**
**கிஞ்சித்3ப4க்ஷிதமாம்ஸஶேஷகப3லம் நவ்யோபஹாராயதே**
**ப4க்தி: கிம் ந கரோத்யஹோ வனசரோ ப4க்தாவதம்ஸாயதே ॥ 63 ॥**

வழியில் நடப்பதனால் தேய்ந்த பாதுகை பசுபதியினுடைய புருவங்களின் மத்திய இடம் போல் ஆயிற்று. வாயினால் கொப்பளித்த ஜலம் முப்புரங்களை எரித்த பரமேஸ்வரனுக்கு திவ்யமான அபிஷேகம் ஆயிற்று உண்டுமிகுந்த மாம்ஸ உருண்டை புனிதமான நிவேதனமாயிற்று. பக்தி எதைத்தான் செய்யாது. ஒரு வேடன் பக்தர்களிலே தலைசிறந்தவனாக ஆனான்! ஆச்சர்யம்!

**वक्षस्ताडनमन्तकस्य कठिनापस्मारसंमर्दनं**
**भूभृत्पर्यटनं नमस्सुरशिरःकोटीरसङ्घर्षणम् ।**
**कर्मेदं मृदुलस्य तावकपदद्वन्द्वस्य गौरीपते**
**मच्चेतोमणिपादुकाविहरणं शम्भो सदाङ्गीकुरु ॥ ६४ ॥**

**வக்ஷஸ்தாட³னமந்தகஸ்ய கடி²னாபஸ்மாரஸம்மர்த³னம்**
**பூ⁴ப்⁴ருத்பர்யடனம் நமஸ்ஸுரஶிரஃகோடீரஸங்க⁴ர்ஷணம் ।**
**கர்மேத³ம் ம்ருது³லஸ்ய தாவகபத³த்³வந்த்³வஸ்ய கௌ³ரீபதே**
**மச்சேதோமணிபாது³காவிஹரணம் ஶம்போ⁴ ஸதா³ங்கீ³குரு ॥ 64 ॥**

ஹே பார்வதீ நாதா, சம்போ, யமனை மார்பில் எட்டி உதைத்தல், கடினமான அபஸ்மாரத்தை அழித்தல், கைலாஸ மலையிலே சஞ்சரித்தல், வணங்குகின்ற தேவர்களின் மகுடங்களில் உரைத்தல் ஆகியவைகள் உன்னுடைய மிருதுவான பாதங்களின் வேலையாகிறது. அவைகளுக்கு என்னுடைய மனமாகிற மணிப்பாதுகையை அங்கீகரித்துக்கொள்வாயாக.

**वक्षस्ताडनशङ्कया विचलितो वैवस्वतो निर्जराः**
**कोटीरोज्ज्वलरत्नदीपकलिकानीराजनं कुर्वते ।**
**दृष्ट्वा मुक्तिवधूस्तनोति निभृताश्लेषं भवानीपते**
**यच्चेतस्तव पादपद्मभजनं तस्येह किं दुर्लभम् ॥ ६५ ॥**

**வக்ஷஸ்தாட³னஶங்கயா விசலிதோ வைவஸ்வதோ நிர்ஜராஃ**
**கோடீரோஜ்ஜ்வலரத்னதீ³பகலிகாநீராஜனம் குர்வதே ।**
**த்³ருஷ்ட்வா முக்திவதூ⁴ஸ்தனோதி நிப்⁴ருதாஶ்லேஷம் ப⁴வானீபதே**
**யச்சேதஸ்தவ பாத³பத்³மப⁴ஜனம் தஸ்யேஹ கிம் து³ர்லப⁴ம் ॥ 65 ॥**

ஹே பவானீ நாதனே! எவனுடைய மனம் உன்னுடைய பாதங்களை பஜிக்கின்றதோ அவனுக்கு அடைய முடியாதது எது இருக்கிறது? அவனைக் கண்டவுடன் மார்பிலே உதைகிடைக்கு மென்ற பயத்தினால் யமன் ஓடிப்போகிறான். தேவர்கள் தங்களுடைய கிரீடங்களில் பிரகாசிக்கின்ற தீபம்போலுள்ள ரத்னங்களினால் நீராஜனம் செய்கிறார்கள். (அதாவது பக்தனைத் தேவர்கள் வணங்குகிறார்கள்). முக்தி என்ற பெண் அவனை இறுகத் தழுவிக்கொள்கிறாள். (பக்தனுக்கு மோக்ஷம் அதிஸுலபம்)

**क्रीडार्थं सृजसि प्रपञ्चमखिलं क्रीडामृगास्ते जनाः**
**यत्कर्माचरितं मया च भवतः प्रीत्यै भवत्येव तत् ।**
**शम्भो स्वस्य कुतूहलस्य करणं मच्चेष्टितं निश्चितं**
**तस्मान्मामकरक्षणं पशुपते कर्तव्यमेव त्वया ॥ ६६ ॥**

**க்ரீடா³ர்த²ம் ஸ்ருஜஸி ப்ரபஞ்சமகி²லம் க்ரீடா³ம்ருகா³ஸ்தே ஜனா:**
**யத்கர்மாசரிதம் மயா ச ப⁴வத: ப்ரீத்யை ப⁴வத்யேவ தத் ।**
**ஶம்போ⁴ ஸ்வஸ்ய குதூஹலஸ்ய கரணம் மச்சேஷ்டிதம் நிஶ்சிதம்**
**தஸ்மான்மாமகரக்ஷணம் பஶுபதே கர்தவ்யமேவ த்வயா ॥ 66 ॥**

ஹே சம்போ! இந்த அகில உலகங்களையும் விளையாட்டாகப் படைக்கிறாய். அதிலுள்ள ஜனங்கள் உனக்கு விளையாட்டு மிருகங்கள். என்னால் எந்தக் காரியம் செய்யப்படுகிறதோ அது உன் ப்ரீதியின் பொருட்டே ஆகும். ஆகையினால் என்னுடைய செயல்களெல்லாம் உன்னுடைய ஆனந்தத்திற்காகவே என்பது நிச்சயமாகிறது. ஆகையால் என்னைக் காப்பாற்ற வேண்டியது நீ செய்ய வேண்டிய காரியம்.

**बहुविधपरितोषबाष्पपूरस्फुट**
**पुलकाङ्कितचारुभोगभूमिम् ।**
**चिरपदफलकाङ्क्षिसेव्यमानां**
**परमसदाशिवभावनां प्रपद्ये ॥ ६७ ॥**

**ப³ஹுவித⁴பரிதோஷபா³ஷ்பபூரஸ்பு²ட**
**புலகாங்கிதசாருபோ⁴க³பூ⁴மிம் ।**
**சிரபத³ப²லகாங்க்ஷிஸேவ்யமானாம்**
**பரமஸதா³ஶிவபா⁴வனாம் ப்ரபத்³யே ॥ 67 ॥**

பலவிதமான சந்தோஷத்தினால் ஏற்படுகிற ஆனந்தக் கண்ணீர்ப் பெருக்கு, சரீரத்தில் ஏற்படுகின்ற புலகாங்கிதம் இவைகளுக்கு இடமான அழகிய போக பூமியும் மோக்ஷ ஸ்தானத்தை விரும்புபவர்களால் பூஜிக்கப்படுகிறதுமான எல்லாவற்றிற்கு மேலான ஸதாசிவனுடைய தியானத்தை நான் சரணமடைகிறேன்.

**अमितमुदमृतं मुहुर्दुहन्तीं**
**विमलभवत्पदगोष्ठमावसन्तीम् ।**
**सदय पशुपते सुपुण्यपाकां**
**मम परिपालय भक्तिधेनुमेकाम् ॥ ६८ ॥**

**அமிதமுத³ம்ருதம் முஹுர்து³ஹந்தீம்**
**விமலப⁴வத்பத³கோ³ஷ்ட²மாவஸந்தீம் ।**
**ஸத³ய பஶுபதே ஸுபுண்யபாகாம்**
**மம பரிபாலய ப⁴க்திதே⁴னுமேகாம் ॥ 68 ॥**

ஹே பசுபதே! தயை நிரம்பினவனே!! என்னுடைய ஒரே பசுவான பக்தியைக் காப்பாற்றுவாயாக. அப்பசு பல புண்யங்களின் பலனைக் கிடைத்தது. மீண்டும் மீண்டும் அளவற்றதான ஆனந்தமென்ற பாலைத் தருவது. மேலும் உன்னுடைய விமலமான பாதங்கள் என்ற கோஷ்டத்திலே தங்கியிருப்பது.

**जडता पशुता कलङ्किता**
**कुटिलचरत्वं च नास्ति मयि देव ।**
**अस्ति यदि राजमौले**
**भवदाभरणस्य नास्मि किं पात्रम् ॥ ६९ ॥**

**ஜட³தா பஶுதா கலங்கிதா**
**குடிலசரத்வம் ச நாஸ்தி மயி தே³வ ।**
**அஸ்தி யதி³ ராஜமௌலே**
**ப⁴வதா³ப⁴ரணஸ்ய நாஸ்மி கிம் பாத்ரம் ॥ 69 ॥**

ஹே தேவா! ராஜ மௌலே!! என்னிடத்தில் ஜடத்வம், பசுத்வம், கலங்கம், கோணலாகச் சஞ்சரிக்கும் தன்மை எதுவும் இல்லை. இவைகளில் ஏதாவதொன்று இருந்திருக்குமானுல்கூட உன்னுடைய ஆபரணமாக இருப்பதற்குப் பாத்திரமாக ஆகமாட்டேனு?

**अरहसि रहसि स्वतन्त्रबुद्ध्या**
**वरिवसितुं सुलभः प्रसन्नमूर्तिः ।**
**अगणितफलदायकः प्रभुर्मे**
**जगदधिको हृदि राजशेखरोऽस्ति ॥ ७० ॥**

**அரஹஸி ரஹஸி ஸ்வதந்த்ரபு³த்³த்⁴யா**
**வரிவஸிதும் ஸுலப⁴: ப்ரஸன்னமூர்தி: ।**
**அக³ணிதப²லதா³யக: ப்ரபு⁴ர்மே**
**ஜக³த³தி⁴கோ ஹ்ருதி³ ராஜஶேக²ரோ(அ)ஸ்தி ॥ 70 ॥**

பிரபுவாகவும், பிரஸன்ன மூர்த்தியாகவும். எண்ண முடியாத பலன்களை அளிக்கின்றவனுயும், இந்த ஜகத்துக்கெல்லாம் மேம்பட்டவனாகவும் உள்ள சந்திர சேகரன் என்னுடைய ஹிருதயத்திலே வாஸம் செய்கிறுன். அவன் உள்ளும் புறமும் ஸ்வதந்திரமான புத்தியினுல் ஸமீபத்தில் வஸிப்பதற்குச் சுலபமானவன்.

**आरूढभक्तिगुणकुञ्चितभावचाप-**
**युक्तैः शिवस्मरणबाणगणैरमोघैः ।**
**निर्जित्य किल्बिषरिपून् विजयी सुधीन्द्रः**
**सानन्दमावहति सुस्थिरराजलक्ष्मीम् ॥ ७१॥**

**ஆரூட⁴ப⁴க்திகு³ணகுஞ்சிதபா⁴வசாப-**
**யுக்தை: ஶிவஸ்மரணபா³ணக³ணைரமோகை⁴: ।**
**நிர்ஜித்ய கில்பி³ஷரிபூன் விஜயீ ஸுதீ⁴ந்த்³ர:**
**ஸானந்த³மாவஹதி ஸுஸ்தி²ரராஜலக்ஷ்மீம் ॥ 71 ॥**

தியானம் என்கிற வில்லில் த்ருடமான பக்தி என்னும் நாண்கயிற்றை வளைத்துத் தொடுக்கப்பட்ட அமோகமான சிவஸ்மரணம் என்னும் பாண கணங்களி ஞல், நல்ல மனமுடைய ஒருவன் பாபங்களாகிய விரோதிகளை ஜயிக்கிறுன். ஸ்திர மானதும் ஆனந்தத்துடன் கூடியதுமான ராஜலக்ஷ்மியாகிற முக்தியை அடைகிறுன்.

**ध्यानाञ्जनेन समवेक्ष्य तमःप्रदेशं**
**भित्वा महाबलिभिरीश्वरनाममन्त्रैः ।**
**दिव्याश्रितं भुजगभूषणमुद्वहन्ति**
**ये पादपद्ममिह ते शिव ते कृतार्थाः ॥ ७२ ॥**

**த்⁴யாஞஞ்ஜனேன ஸமவேக்ஷ்ய தமꞏப்ரதே³ஶம்**
**பி⁴த்வா மஹாப³லிபி⁴ரீஶ்வரநாமமந்த்ரைꞏ ।**
**தி³வ்யாஶ்ரிதம் பு⁴ஜக³பூ⁴ஷணமுத்³வஹந்தி**
**யே பாத³பத்³மமிஹ தே ஶிவ தே க்ருதார்தா²ꞏ ॥ 72 ॥**

ஹே பரமேஶ்வரா! எவர்கள் உன்னுடைய தியானம் என்னும் அஞ்ஜனத்தி ஞல் தெரிந்துகொண்டு, ஈஶ்வர நாம மந்த்ரங்கள் என்ற பலியினுல் அக்ஞானம் என்கிற இருளடர்ந்த பிரதேசத்தைப் பிளந்துகொண்டு, தேவர்களினுல் அடைக்கலம் அடையப்பட்டவனுகவும், ஸர்ப்பத்தைப் பூஷணமாகப் பூண்டுகொண்டு இருப்பவனு மாகிய உன்னுடைய பாதத்தாமரையை இந்த ஜன்மத்தில் அடைகிறுர்களோ அவர்க ளே கிருதார்த்தர்களாவார்கள்.

**भूदारतामुदवहद्यदपेक्षया**
**श्री भूदार एव किमतः सुमते लभस्व ।**
**केदारमाकलितमुक्तिमहौषधीनां**
**पादारविन्दभजनं परमेश्वरस्य ॥ ७३ ॥**

**பூ⁴தா³ரதாமுத³வஹத்³யத³பேக்ஷயா**
**ஸ்ரீ பூ⁴தா³ர ஏவ கிமதꞏ ஸுமதே லப⁴ஸ்வ ।**
**கேதா³ரமாகலிதமுக்திமஹௌஷதீ⁴ஞம்**
**பாதா³ரவிந்த³ப⁴ஜனம் பரமேஶ்வரஸ்ய ॥ 73 ॥**

ஹே நல்ல புத்தியே! எதை அபேக்ஷித்து லக்ஷ்மி தேவியையும் பூமாதேவி யையும் பத்னிகளாக உடைய மஹாவிஷ்ணுவே பன்றி ரூபத்தையடைந்தாரோ அப்படிப்பட்டதும் எல்லோராலும் வேண்டப்படுகிற மோக்ஷம் என்னும் சிறந்த மூலிகை விளையும் நிலமாகவும் இருக்கிற பரமேஸ்வரனுடைய பாதாரவிந்த ஸேவையை அடைவாயாக. நீ அடையக்கூடியது வேறு என்ன இருக்கிறது?

**आशापाशक्लेशदुर्वासनादि-**
**भेदोद्युक्तैर्दिव्यगन्धैरमन्दैः ।**
**आशाशाटीकस्य पादारविन्दं**
**चेतःपेटीं वासितां मे तनोतु ॥ ७४ ॥**

**ஆஶாபாஶக்லேஶது³ர்வாஸநாதி³-**
**பே⁴தோ³த்³யுக்தைர்தி³வ்யக³ந்தை⁴ரமந்தை³: ।**
**ஆஶாஶாடீகஸ்ய பாதா³ரவிந்த³ம்**
**சேத:பேடீம் வாஸிதாம் மே தனோது ॥ 74 ॥**

ஆசை, பாசம், கிலேசம் முதலிய துர்வாஸனைகளைப் போக்கி என்னுடைய மனதாகிய பெட்டியைத் திக்குகளை ஆடையாக உடைய பரமேஸ்வரனுடைய பரதார விந்தங்கள் தன்னுடைய திவ்யமான கந்தங்களினால் அளவுக் கடங்காத வாசனை உள்ளதாகச் செய்யட்டும்.

**कल्याणिनां सरसचित्रगतिं सवेगं**
**सर्वेङ्गितज्ञमनघं ध्रुवलक्षणाढ्यम् ।**
**चेतस्तुरङ्गमधिरुह्य चर स्मरारे**
**नेतः समस्तजगतां वृषभाधिरूढ ॥ ७५ ॥**

**கல்யாணினாம் ஸரஸசித்ரக³திம் ஸவேக³ம்**
**ஸர்வேங்கி³தஜ்ஞமனக⁴ம் த்⁴ருவலக்ஷணாட்⁴யம் ।**
**சேதஸ்துரங்க³மதி⁴ருஹ்ய சர ஸ்மராரே**
**நேத: ஸமஸ்தஜக³தாம் வ்ருஷபா⁴தி⁴ரூட⁴ ॥ 75 ॥**

காமனை எரித்தவனே! ஸகல லோகங்களுக்கும் அதிபதியே! ஹே ரிஷபவாஹ னனே! நல்ல கல்யாண குணங்களை யுடையதும், வேகமாகவும், விசித்திரமான கதிகளிலும் செல்லக் கூடியதும், ஸர்வ இங்கிதங்களை அறிந்து செல்லக் கூடியதும், தோஷமில்லாததும், ஸ்திரமான சுபலக்ஷணங்களை யுடையதுமான என்னுடைய மனமென்னும் குதிரையின் மேல் ஏறிக்கொண்டு சஞ்சரிப்பாயாக.

**भक्तिर्महेशपदपुष्करमावसन्ती**
**कादम्बिनीव कुरुते परितोषवर्षम् ।**
**सम्पूरितो भवति यस्य मनस्तटाक-**
**स्तज्जन्मसस्यमखिलं सफलं च नाऽन्यत् ॥ ७६ ॥**

**ப⁴க்திர்மஹேஶபத³புஷ்கரமாவஸந்தீ**
**காத³ம்பி³னீவ குருதே பரிதோஷவர்ஷம் ।**
**ஸம்பூரிதோ ப⁴வதி யஸ்ய மனஸ்த்தடாக-**
**ஸ்தஜ்ஜன்மஸஸ்யமகி²லம் ஸப²லம் ச நா(அ)ன்யத் ॥ 76 ॥**

பக்தியானது மேகத்தைப் போல மஹேஸ்வரனுடைய பாதமாகிற ஆகாயத்தில் வஸித்துக்கொண்டு ஸந்தோஷமாகிற மழையைப் பொழிகிறது. எவனுடைய மனமென்னும் தடாகம் மேற்கூறிய ஆனந்தமென்கிற மழையினுல் நிரம்பப்பெறுகிறதோ அவனுடைய ஜன்மமாகிய பயிர் முழுவதும் பயனடைகின்றது. வேறு யாரும் பயனடைவது இல்லை.

**बुद्धिःस्थिरा भवितुमीश्वरपादपद्म-**
**सक्ता वधूर्विरहिणीव सदा स्मरन्ती ।**
**सद्भावनास्मरणदर्शनकीर्तनादि**
**संमोहितेव शिवमन्त्रजपेन विन्ते ॥ ७७ ॥**

**பு³த்³தி⁴:ஸ்தி²ரா ப⁴விதுமீஸ்வரபாத³பத்³ம-**
**ஸக்தா வதூ⁴ர்விரஹிணீவ ஸதா³ ஸ்மரந்தீ ।**
**ஸத்³பா⁴வனாஸ்மரணத³ர்ஶனகீர்தநாதி³**
**ஸம்மோஹிதேவ ஶிவமந்த்ரஜபேன விந்தே ॥ 77 ॥**

ஈஸ்வரா! பதியினுடைய பிரிவு ஏற்பட்ட மனைவியைப்போல, உன்னுடைய பாதபத்மங்களுடன் தொடர்பு கொண்டுள்ள என்னுடைய மனம் த்ருடமடைய உன்னையே சதா காலமும் ஸ்மரித்துக்கொண்டு இருக்கிறது. மேலும் சிவமந்த்ர ஜபங்களினுல் மோஹிக்கப்பட்டு நல்ல நினைவுகள், எண்ணங்கள், காட்சி, கீர்த்தனம் இவைகளில் ஈடுபடுகிறது.

**सदुपचारविधिष्वनुबोधितां**
**सविनयां सुहृदं सदुपाश्रितम् ।**
**मम समुद्धर बुद्धिमिमां प्रभो**
**वरगुणेन नवोढवधूमिव ॥ ७८ ॥**

**ஸது³பசாரவிதி⁴ஷ்வனுபோ³தி⁴தாம்**
**ஸவினயாம் ஸுஹ்ருத³ம் ஸது³பாஶ்ரிதம் ।**
**மம ஸமுத்³த⁴ர பு³த்³தி⁴மிமாம் ப்ரபோ⁴**
**வரகு³ணேன நவோட⁴வதூ⁴மிவ ॥ 78 ॥**

பிரபுவே ஒரு புதிய மணப்பெண்ணை உத்தரணம் செய்வதுபோல என்னுடைய புத்தியை உத்தரணம் செய்வாய். அந்த புத்தியானது நல்ல உபசார விதிகளில் போதிக்கப்பட்டு இருக்கிறது. வினயமுடையது. நல்ல ஹ்ருதயம் உடையது. எப்பொழுதும் நன்மையையே ஆஶ்ரயிக்கும் தன்மையுடையது.

नित्यं योगिमनः सरोजदलसञ्चारक्षमस्त्वत्क्रमः
शम्भो तेन कथं कठोरयमराड्वक्षःकवाटक्षतिः ।
अत्यन्तं मृदुलं त्वदङ्घ्रियुगलं हा मे मनश्चिन्तय-
त्येतल्लोचनगोचरं कुरु विभो हस्तेन संवाहये ॥ ७९ ॥

நித்யம் யோகி³மனঃ ஸரோஜத³லஸஞ்சாரக்ஷமஸ்த்வத்க்ரமঃ
ஶம்போ⁴ தேன கத²ம் கடோ²ரயமராட்³வக்ஷঃகவாடக்ஷதிঃ ।
அத்யந்தம் ம்ருது³லம் த்வத³ங்க்⁴ரியுக³லம் ஹா மே மனஶ்சிந்தய-
த்யேதல்லோசனகோ³சரம் குரு விபோ⁴ ஹஸ்தேன ஸம்வாஹயே ॥ 79 ॥

ஹே சம்புவே, உன்னுடைய பாதங்கள் யோகியர்களுடைய மனங்களாகிய தாமரை இதழ்களின் மீது நடந்து பழக்கப்பட்டவை. அப்படியிருக்க அவைகள் யமனுடைய கடினமான மார்புப்பிரதேசத்தில் எப்படி உதைக்க முடியும்? உன்னுடைய பாதங்கள் அதி மிருதுலமானவை என்று என்னுடைய மனம் சிந்திக்கின்றது. பிரபுவே அவைகளை என்னுடைய கண்களுக்குத் தெரியும்படிச் செய்வாய். அவைகளை நான் என்னுடைய இரண்டு கைகளால் தாங்கிக் கொள்கிறேன்.

एष्यत्येष जनिं मनोऽस्य कठिनं तस्मिन्नटानीति -
मद्रक्षायै गिरिसीम्नि कोमलपदन्यासः पुराभ्यासितः ।
नोचेद्दिव्यगृहान्तरेषु सुमनस्तल्पेषु वेद्यादिषु
प्रायः सत्सु शिलातलेषु नटनं शम्भो किमर्थं तव ॥ ८० ॥

ஏஷ்யத்யேஷ ஜனிம் மனோ(அ)ஸ்ய கடி²னம் தஸ்மின்னடாநீதி
மத்³ரக்ஷாயை கி³ரிஸீம்னி கோமலபத³ந்யாஸঃ புராப்⁴யாஸிதঃ ।
நோசேத்³தி³வ்யக்³ருஹாந்தரேஷு ஸுமனஸ்தல்பேஷு வேத்³யாதி³ஷு
ப்ராயঃ ஸத்ஸு ஶிலாதலேஷு நடனம் ஶம்போ⁴ கிமர்த²ம் தவ ॥ 80 ॥

ஹே சம்போ, இவன் பிறக்கப்போகிறுன். அவனுடைய மனம் கடினமானது. அதிலே நான் நடனமாட வேண்டும் என்று என்னை ரக்ஷிப்பதின் பொருட்டு பர்வதத்தின் மத்தியிலே வைத்து உன்னுடைய மிருதுலமான திருவடிகள் பழக்கம் செய்து கொள்ளப்பட்டிருக்கிறது. அப்படியில்லாவிட்டால் திவ்யமான கிருகங்களும் புஷ்ப மெத்தைகளும் மேடைகளும் நிறைய இருந்தும்கூட கற்பிரதேசங்களில் நீ நடனம் செய்வது எதற்காக?

कञ्चित्कालमुमामहेश भवतः पादारविन्दार्चनैः
कञ्चिद्ध्यानसमाधिभिश्च नतिभिः कञ्चित्कथाकर्णनैः ।
कञ्चित् कञ्चिदवेक्षणैश्च नुतिभिः कञ्चिद्दशामीदृशीं
यः प्राप्नोति मुदा त्वदर्पितमना जीवन् स मुक्तः खलु ॥ ८१ ॥

**கஞ்சித்காலமுமாமஹேஶ ப⁴வத: பாதா³ரவிந்தா³ர்சனை:**
**கஞ்சித்³த்⁴யானஸமாதி⁴பி⁴ஶ்ச நதிபி⁴: கஞ்சித்கதா²கர்ணனை: ।**
**கஞ்சித் கஞ்சித³வேக்ஷணைஶ்ச நுதிபி⁴: கஞ்சித்³த³ஶாமீத்³ருஶீம்**
**ய: ப்ராப்னோதி முதா³ த்வத³ர்பிதமனா ஜீவன் ஸ முக்த: க²லு ॥ 81 ॥**

ஹே உமாமஹேஶா! சிலகாலம் உன்னுடைய பாதார விந்தங்களை அர்ச்சனை செய்வது, சில காலம் தியானம், சில காலம் ஸமாதி நிலை, சில காலம் நமஸ்கரிப்பது, சில காலம் உன்னுடைய சரித்திரங்களை ஸ்ரவணம் செய்வது, சில காலம் உன்னுடைய உருவத்தைத் தர்சனம் செய்வது, சில காலம் உன்னுடைய புகழைப் பாடுவது ஆக இப்படி எவன் சந்தோஷத்தினால் தன்னுடைய மனதை உன்னிடத்தில் அர்ப்பணம் செய்யும் நிலையை அடைகிறானோ அவனேதான் ஜீவன் முக்தன்.

**बाणत्वं वृषभत्वमर्धवपुषा भार्यात्वमार्यापते**
**घोणित्वं सखिता मृदङ्गवहता चेत्यादि रूपं दधौ ।**
**त्वत्पादे नयनार्पणं च कृतवान् त्वद्देहभागो हरिः**
**पूज्यात्पूज्यतरः स एव हि न चेत् को वा तदान्योऽधिकः ॥ ८२ ॥**

**பா³ணத்வம் வ்ருஷப⁴த்வமர்த⁴வபுஷா பா⁴ர்யாத்வமார்யாபதே**
**கோ⁴ணித்வம் ஸகி²தா ம்ருத³ங்க³வஹதா சேத்யாதி³ ரூபம் த³தௌ⁴ ।**
**த்வத்பாதே³ நயனார்பணம் ச க்ருதவான் த்வத்³தே³ஹபா⁴கோ³ ஹரி:**
**பூஜ்யாத்பூஜ்யதர: ஸ ஏவ ஹி ந சேத் கோ வா ததா³ன்யோ(அ)தி⁴க: ॥ 82 ॥**

ஹே பார்வதீ நாதா! ஹரியானவர் பாணமாகவும், உன்னுடைய சரீரத்தில் பாதியைப் பெற்ற பார்யையாகவும், பன்றி ரூபமாகவும், சகியாகவும், மிருதங்கம் வாசிப்பவனாகவும் பல ரூபங்களைத் தரித்தார். உன்னுடைய பாதாரவிந்தங்களிலே தன்னுடைய கண்ணை அர்ப்பணம் செய்தார். அப்படி உன்னுடைய தேஹத்தில் ஒரு பாகமாக விளங்குகிற அவர் தேவர்களிலே சிறந்தவராக இருக்கிறார். அந்த மஹா விஷ்ணுவைக்காட்டிலும் அதிகமானவர் யார் இருக்கிறார்கள்? (ஈஸ்வரனுடைய சம்பந்தத்தினால் தான் மஹாவிஷ்ணுவிற்கே சிறப்பு ஏற்பட்டது. ஆகையால் இந்த ஸ்லோகத்திலும் சிவப்ரஸாதத்தின் மஹிமையே விளக்கப்படுகிறது).

**जननमृतियुतानां सेवया देवतानां**
**न भवति सुखलेशः संशयो नास्ति तत्र ।**
**अजनिममृतरूपं साम्बमीशं भजन्ते**
**य इह परमसौख्यं ते हि धन्या लभन्ते ॥ ८३ ॥**

**ஜனனம்ருதியுதானாம் ஸேவயா தே³வதானாம்**
**ந ப⁴வதி ஸுக²லேஶ: ஸம்ஶயோ நாஸ்தி தத்ர ।**
**அஜனிமம்ருதரூபம் ஸாம்ப³மீஶம் ப⁴ஜந்தே**
**ய இஹ பரமஸௌக்²யம் தே ஹி த⁴ன்யா லப⁴ந்தே ॥ 83 ॥**

ஜனன மரணங்களை உடைய சிறு தேவதைகளை ஸேவிப்பதினுல் இம்மியளவு சுகம் கூடக் கிடைப்பதில்லை. இதில் ஒரு துளி சந்தேகமும் கிடையாது. பிறப்பு இல்லாதவனும் ஶாஸ்வதமானவனும் அம்பிகையுடன் கூடியவனும் ஆன ஈசனை பஜிப்பவர்கள் உண்மையில் பாக்யசாலிகள். அவர்கள் பரமஸௌக்கியத்தை அடைகிருர்கள்.

**शिव तव परिचर्यासन्निधानाय गौर्या**
**भव मम गुणधुर्यां बुद्धिकन्यां प्रदास्ये ।**
**सकलभुवनबन्धो सच्चिदानन्दसिन्धो**
**सदय हृदयगेहे सर्वदा संवस त्वम् ॥ ८४ ॥**

**ஶிவ தவ பரிசர்யாஸந்நிதா⁴ஞய கௌ³ர்யா**
**ப⁴வ மம கு³ணது⁴ர்யாம் பு³த்³தி⁴கன்யாம் ப்ரதா³ஸ்யே ।**
**ஸகலபு⁴வனப³ந்தோ⁴ ஸச்சிதா³னந்த³ஸிந்தோ⁴**
**ஸத³ய ஹ்ருத³யகே³ஹே ஸர்வதா³ ஸம்வஸ த்வம் ॥ 84 ॥**

ஹே ஸிவ! பவ! ஸகல உலகங்களுக்கும் பந்துவே! ஸச்சிதானந்த மூர்த்தியே! கருணை யுள்ளவனே! நற்குணங்கள் நிரம்பிய என்னுடைய மனம் என்னும் கன்னிகையை உன்னுடைய ஸேவையின்பொழுது கௌரியுடன் இருக்க, உனக்குக் கொடுக்கிறேன்! என்னுடைய ஹிருதயமென்னும் அந்தரங்கமான வாஸஸ்தலத்திலே நீ எப்பொழுதும் வஸிப்பாயாக.

**जलधिमथनदक्षो नैव पातालभेदी**
**न च वनमृगयायां नैव लुब्धः प्रवीणः ।**
**अशनकुसुमभूषावस्त्रमुख्यां सपर्यां**
**कथय कथमहं ते कल्पयानीन्दुमौले ॥ ८५ ॥**

**ஜலதி⁴மத²னத³க்ஷோ நைவ பாதாளபே⁴தீ³**
**ந ச வனம்ருக³யாயாம் நைவ லுப்³த⁴: ப்ரவீண: ।**
**அஶனகுஸுமபூ⁴ஷாவஸ்த்ரமுக்²யாம் ஸபர்யாம்**
**கத²ய கத²மஹம் தே கல்பயானீந்து³மௌலே ॥ 85 ॥**

ஹே சந்திரசேகரனே! ஸமுத்திரத்தைக் கடையும் ஸாமர்த்தியம் எனக்கு இல்லை. பூமியைப் பிளக்கவும் இயலாது. காடுகளில் வேட்டையாடுவதில் திறமையான வேடனுகவும் நான் இல்லை. அங்ஙனமிருக்க உன்னுடைய பூஜைக்குத் தேவையான உணவு, புஷ்பம், ஆபரணங்கள், வஸ்திரம் முதலிய வஸ்துக்களை எவ்விதம் சம்பாதித்து உன்னுடைய பூஜையைச் செய்வேன்? நீயே சொல் வாயாக.

पूजाद्रव्यसमृद्धयो विरचिताः पूजां कथं कुर्महे
पक्षित्वं न च वा किटित्वमपि न प्राप्तं मया दुर्लभम् ।
जाने मस्तकमङ्घ्रिपल्लवमुमाजाने न तेऽहं विभो
न ज्ञातं हि पितामहेन हरिणा तत्त्वेन तद्रूपिणा ॥ ८६ ॥

பூஜாத்³ரவ்யஸம்ருத்³த⁴யோ விரசிதா꞉ பூஜாம் கத²ம் குர்மஹே
பக்ஷித்வம் ந ச வா கிடித்வமபி ந ப்ராப்தம் மயா து³ர்லப⁴ம் ।
ஜானே மஸ்தகமங்க்⁴ரிபல்லவமுமாஜானே ந தே(அ)ஹம் விபோ⁴
ந ஜ்ஞாதம் ஹி பிதாமஹேன ஹரிணா தத்த்வேன தத்³ரூபிணா ॥ 86 ॥

உமாதேவியைப் பத்னியாக உடையவனே! பூஜைக்கு வேண்டிய வஸ்துக்கள் எல்லாம் சேகரித்தாகிவிட்டது. ஆனல் நான் எப்படிப் பூஜை செய்வேன்? என்ஞல் அடைவதற்கு துர்லபமான பக்ஷியினுடைய தன்மையையோ அல்லது மிருகத்தினுடைய தன்மையையோ நான்பெறவில்லை. ஹே ஸர்வேஸ்வரா! நான் உன்னுடைய திருமுடியையோ அல்லது தளிர்கள் போன்ற திருவடியையோ காணவில்லை. உண்மையில் பக்ஷி மிருகம் இவைகளின் உருவங்களை எடுத்துக்கொண்ட பிரம்மா விஷ்ணு இவர்களாலும் அவைகளைக் காணமுடிய வில்லையே. (திருவடியையும் திருமுடியையும் காணாது எப்படிப் பூஜை செய்யமுடியும்? என்பது கருத்து).

अशनं गरलं फणी कलापो
वसनं चर्म च वाहनं महोक्षः ।
मम दास्यसि किं किमस्ति शम्भो
तव पादाम्बुजभक्तिमेव देहि ॥ ८७ ॥

அஶனம் க³ரலம் ப²ணீ கலாபோ
வஸனம் சர்ம ச வாஹனம் மஹோக்ஷ꞉ ।
மம தா³ஸ்யஸி கிம் கிமஸ்தி ஶம்போ⁴
தவ பாதா³ம்பு³ஜப⁴க்திமேவ தே³ஹி ॥ 87 ॥

ஹே சம்போ! உனக்கு ஆகாரம் விஷம். ஆபரணங்கள் ஸர்ப்பம். வஸ்த்ரம் யானைத்தோல். வாகனம் பெரிய காளைமாடு. ஆகையால் எனக்கு எதைக் கொடுக்கப் போகிறுய்? உன்னுடைய திருவடித் தாமரைகளில் பக்தியை மட்டுமே கொடுப்பாயாக.

यदा कृताम्भोनिधिसेतुबन्धनः
करस्थलाधःकृतपर्वताधिपः ।
भवानि ते लङ्घितपद्मसम्भव-
स्तदा शिवार्चास्तवभावनक्षमः ॥ ८८ ॥

**யதா³ க்ருதாம்போ⁴நிதி⁴ஸேதுப³ந்த⁴ன꞉**
**கரஸ்த²லாத⁴꞉க்ருதபர்வதாதி⁴ப꞉ ।**
**ப⁴வானி தே லங்கி⁴தபத்³மஸம்ப⁴வ-**
**ஸ்ததா³ ஶிவார்சாஸ்தவபா⁴வனக்ஷம꞉ ॥ 88 ॥**

ஸமுத்திரத்தில் அணை கட்டினவனுகவும், விந்திய மலையைத் தன்னுடைய கையினுல் அடக்கினவனுகவும் அல்லது தாமரையில் அவதரித்த பிரமதேவனுகவும் நான் ஆகும்பொழுதுதான் உன்னை அர்ச்சனை செய்யவோ, உன் புகழைப் பாடவோ, அல்லது உன்னை த்யானிக்கவோ சக்தியுடையவனாக ஆவேன்.

**नतिभिर्नुतिभिस्त्वमीशपूजा-**
**विधिभिर्ध्यानसमाधिभिर्न तुष्टः ।**
**धनुषा मुसलेन चाश्मभिर्वा**
**वद ते प्रीतिकरं तथा करोमि ॥ ८९ ॥**

**நதிபி⁴ர்நுதிபி⁴ஸ்த்வமீஶபூஜா-**
**விதி⁴பி⁴ர்த்⁴யானஸமாதி⁴பி⁴ர்ன துஷ்ட꞉ ।**
**த⁴னுஷா முஸலேன சாஶ்மபி⁴ர்வா**
**வத³ தே ப்ரீதிகரம் ததா² கரோமி ॥ 89 ॥**

ஹே ஈஸ! நமஸ்காரம், தோத்திரம், விதிப்படி செய்யும் பூஜை, தியானம், ஸமாதி இவைகளில் நீ திருப்தியடைவது இல்லை. அம்பினுலோ, தடியால் அடிக்கப்படுதலாலோ, அல்லது கல்லடியாலோதான் நீ சந்தோஷத்தை அடைவாய் என்றல் அப்படிச் சொல்வாய். உனக்குப் ப்ரீதியானதைச் செய்கிறேன்.

**वचसा चरितं वदामि शम्भो-**
**रहमुद्योगविधासु तेऽप्रसक्तः ।**
**मनसा कृतिमीश्वरस्य सेवे**
**शिरसा चैव सदाशिवं नमामि ॥ ९० ॥**

**வசஸா சரிதம் வதா³மி ஶம்போ⁴-**
**ரஹமுத்³யோக³விதா⁴ஸு தே(அ)ப்ரஸக்த꞉ ।**
**மனஸா க்ருதிமீஶ்வரஸ்ய ஸேவே**
**ஶிரஸா சைவ ஸதா³ஶிவம் நமாமி ॥ 90 ॥**

நான் என்னுடைய வாக்கினுல் உன்னுடைய சரிதத்தைச் சொல்லுகிறேன். மனதினுல் பரமேஸ்வரனுன உனது உருவத்தை ஸேவிக்கிறேன். தலையினுல் ஸதாஶிவனுன உன்னை நமஸ்கரிக்கிறேன். இவைகளைத்தவிர நான் உன்னுடைய பூஜா விஷயங்கள் ஒன்றும் பழக்கமில்லாதவன்.

**आद्याऽविद्या हृद्गता निर्गतासीद्विद्या**
**हृद्या हृद्गता त्वत्प्रसादात् ।**
**सेवे नित्यं श्रीकरं त्वत्पदाब्जं**
**भावे मुक्तेर्भाजनं राजमौले ॥ ९१ ॥**

**ஆத்³யா(அ)வித்³யா ஹ்ருத்³க³தா நிர்க³தாஸீத்³வித்³யா**
**ஹ்ருத்³யா ஹ்ருத்³க³தா த்வத்ப்ரஸாதா³த் ।**
**ஸேவே நித்யம் ஶ்ரீகரம் த்வத்பதா³ப்³ஜம்**
**பா⁴வே முக்தேர்பா⁴ஜனம் ராஜமௌலே ॥ 91 ॥**

ஹே சந்த்ரசேகரனே! என்னுடைய ஹ்ருதயத்திலே தொன்றுதொட்டு இருந்து வருகிற அவித்யை (அஞ்ஞானம்) உன்னுடைய அருளினுல் அகற்றப்பட்டது. பிரம்ம வித்தையானது ஹிருதயத்திலே சேர்ந்து விட்டது. மங்களத்தையளிப்பதும், மோக்ஷத்திற்கு ஸாதனமானதுமான உன்னுடைய பாதத்தாமரைகள் இரண்டையும் எப்பொழுது நான் ஸேவிக்கிறேன்.

**दूरीकृतानि दुरितानि दुरक्षराणि**
**दौर्भाग्यदुःखदुरहङ्कृतिदुर्वचांसि ।**
**सारं त्वदीयचरितं नितरां पिबन्तं**
**गौरीश मामिह समुद्धर सत्कटाक्षैः ॥ ९२ ॥**

**தூ³ரீக்ருதானி து³ரிதானி து³ரக்ஷராணி**
**தௌ³ர்பா⁴க்³யது³:க²து³ரஹங்க்ருதிது³ர்வசாம்ஸி ।**
**ஸாரம் த்வதீ³யசரிதம் நிதராம் பிப³ந்தம்**
**கௌ³ரீஶ மாமிஹ ஸமுத்³த⁴ர ஸத்கடாக்ஷை: ॥ 92 ॥**

ஹே கௌரீஶ! தலையெழுத்துக் காரணமாகவும், பாவங்களினுலும் ஏற்பட்ட துர்பாக்யம். துக்கம், துரஹங்காரம். துர்வார்த்தைகள் முதலியன தூரவிலக்கப்பட்டன. உன்னுடைய சரிதமாகிய ரஸத்தைப் பிரதிதினமும் நான் பருகுகிறேன், உன்னுடைய ஸத்கடாக்ஷத்தினுல் என்னைக் காப்பாயாக.

**सोमकलाधरमौलौ**
**कोमलघनकन्धरे महामहसि ।**
**स्वामिनि गिरिजानाथे**
**मामकहृदयं निरन्तरं रमताम् ॥ ९३ ॥**

**ஸோமகலாத⁴ரமௌலௌ**
**கோமலக⁴னகந்த⁴ரே மஹாமஹஸி ।**
**ஸ்வாமினி கி³ரிஜாநாதே²**
**மாமகஹ்ருத³யம் நிரந்தரம் ரமதாம் ॥ 93 ॥**

கிரிஜா என்னும் பார்வதியின் பதியாயும், சந்த்ரனைத் தலையில் தரித்திருக் கிறவனையும், அழகிய நீருண்டமேகம் போல் கறுத்த கழுத்தையுடையவனாகவும், மஹாதேஜஸ் வியாகவுமிருக்கின்ற பரமசிவனிடத்தில் என்னுடைய மனம் எப்பொ ழுதும் ரமிக்கட்டும்.

**सा रसना ते नयने तावेव**
**करौ स एव कृतकृत्यः ।**
**या ये यौ यो भर्गं**
**वदतीक्षेते सदार्चतः स्मरति ॥ ९४ ॥**

**ஸா ரஸனா தே நயனே தாவேவ**
**கரௌ ஸ ஏவ க்ருதக்ருத்ய: ।**
**யா யே யௌ யோ ப⁴ர்க³ம்**
**வத³தீக்ஷேதே ஸதா³ர்சத: ஸ்மரதி ॥ 94 ॥**

பரமேஶ்வரனின் நாமத்தை எது சொல்லுகிறதோ அதுவே நாக்கு. எவை அவனைக் காண்கின்றனவோ அவைகளே கண்கள். எவைகள் அவனை அர்ச்சிக்கின்ற னவோ அவைகளே கரங்கள். எவன் அவனை ஸதா காலமும் ஸ்மரணம் செய்கின் றானோ அவனே செய்ய வேண்டிய காரியத்தைச் செய்தவனாவான்.

**अतिमृदुलौ मम चरणावतिकठिनं**
**ते मनो भवानीश ।**
**इति विचिकित्सां सन्त्यज**
**शिव कथमासीद्गिरौ तथा प्रवेशः ॥ ९५ ॥**

**அதிம்ருது³லௌ மம சரணாவதிகடி²னம்**
**தே மனோ ப⁴வானீஶ ।**
**இதி விசிகித்ஸாம் ஸந்த்யஜ**
**ஶிவ கத²மாஸீத்³கி³ரௌ ததா² ப்ரவேஶ: ॥ 95 ॥**

ஹே பவானீஶனே! "என்னுடைய பாதங்கள் மிகவும் ம்ருதுவானவை. உன்னு டைய மனம் மிகவும் கடினமானது" என்ற இந்த உனது எண்ணத்தை நன்றாக விட்டு விடு. அப்படியானால் நீ கடினமான மலையில் எப்படி இருக்கிறாய்?

**धैर्याङ्कुशेन निभृतं**
**रभसादाकृष्य भक्तिशृङ्खलया ।**
**पुरहर चरणालाने**
**हृदयमदेभं बधान चिद्यन्त्रैः ॥ ९६ ॥**

**தை⁴ர்யாங்குஶேன நிப்⁴ருதம்**
**ரப⁴ஸாதா³க்ருஷ்ய ப⁴க்திஶ்ருங்க²லயா ।**
**புரஹர சரணுலானே**
**ஹ்ருத³யமதே³ப⁴ம் ப³தா⁴ன சித்³யந்த்ரை꞉ ॥ 96 ॥**

முப்புரமெரித்த பரமனே! என்னுடைய மனம் என்பது ஒரு மதம் பிடித்த யானை. தைரியம் என்கிற அங்குஸத்தினுல் அதை வசப்படுத்தி பக்தியாகிய சங்கிலி யினுல் உன்னுடைய சரணம் என்கிற முளையில் ஞானம் என்கிற யந்த்ரத்தைக் கொண்டு அசையாமல் இருக்கும்படி கட்டியருள்வாய்.

**प्रचरत्यभितः प्रगल्भवृत्त्या**
**मदवानेष मनः करी गरीयान् ।**
**परिगृह्य नयेन भक्तिरज्ज्वा**
**परम स्थाणुपदं दृढं नयामुम् ॥ ९७ ॥**

**ப்ரசரத்யபி⁴த꞉ ப்ரக³ல்ப⁴வ்ருத்த்யா**
**மத³வானேஷ மன꞉ கரீ க³ரீயான் ।**
**பரிக்³ருஹ்ய நயேன ப⁴க்திரஜ்ஜ்வா**
**பரம ஸ்தா²ணுபத³ம் த்³ருட⁴ம் நயாமும் ॥ 97 ॥**

ஹே பரமேஸ்வரா! இந்த மனதாகிய யானை மதம் பிடித்தது. பெரிய சரீரத்தை உடையது. சாஹஸமான கார்யங்களைச் செய்து கொண்டு தன்னிச்சைப்படி நாலா பக்கங்களிலும் அலைகின்றது. அதை நயமாக பக்தியென்னும் கயிற்றினுல் கட்டி ஶாஶ்வதமான ஸ்தானத்தில் கெட்டியாகக் கட்டியருளுவீர்.

**सर्वालङ्कारयुक्तां सरलपदयुतां साधुवृत्तां सुवर्णां**
**सद्भिःसंस्तूयमानां सरसगुणयुतां लक्षितां लक्षणाढ्याम् ।**
**उद्यद्भूषाविशेषामुपगतविनयां द्योतमानार्थरेखां**
**कल्याणीं देव गौरीप्रिय मम कविताकन्यकां त्वं गृहाण ॥ ९८ ॥**

**ஸர்வாலங்காரயுக்தாம் ஸரலபத³யுதாம்**
**ஸாது⁴வ்ருத்தாம் ஸுவர்ணும்**
**ஸத்³பி⁴꞉ஸம்ஸ்தூயமானும்**
**ஸரஸகு³ணயுதாம் லக்ஷிதாம் லக்ஷணுட்⁴யாம் ।**
**உத்³யத்³பூ⁴ஷாவிஶேஷாமுபக³தவினயாம்**
**த்³யோதமானுர்த²ரேகா²ம்**
**கல்யாணீம் தே³வ கௌ³ரீப்ரிய**
**மம கவிதாகன்யகாம் த்வம் க்³ருஹாண ॥ 98 ॥**

(இந்த ஸ்லோகத்தில் சிவானந்தலஹரீ காவியத்தையே ஒரு கன்னிகையாக வர்ணித்து அக்காவியக்கன் கன்னியை இறைவனுக்கு அர்ப்பணம் செய்கிறுர்கள்.)

**கன்னிகையாகப்பொருள்:** ஹே தேவ, கௌரீப்ரிய! என்னுடைய கவிதா என்கிற கன்னிகையை நீ ஏற்றுக் கொள்வாயாக. இக்கன்னிகை சகலவிதமான அலங்காரங்களுடன் கூடினவள். ஸரளமான பத அமைப்பு உடையவள். சிலாகிக்கத் தகுந்த நடத்தைகளுடன் கூடினவள். நல்ல ஸ்வர்ணத்தின் நிறமுடையவள், நல்ல சான்றோர்களால் புகழப்படுபவள். ஸரஸமான குணங்களுடன் கூடினவள் லக்ஷிய வதூ ஆவாள். உத்தம லக்ஷணங்கள் நிறைந்தவள். பிரகாசிக்கின்ற ஆபரணங்களை அணிந்தவள். இயற்கையாகவே வினயமுடையவள். அதிர்ஷ்டரேகைகளைப் பிரகாச முடையவள் மங்களகரமானவள்.

**கவிதையாகப்பொருள்:** சகலவிதமான சொல்லலங்காரம் பொருள் அலங்கா ரம் முதலியவைகள் நிறைந்தது. ஸரளமான பதங்களுடன் கூடியது. நல்ல விருத்த ங்களினுல் அமைக்கப்பட்டது. மேலான அக்ஷரங்களினுல் அமைக்கப்பட்டது. நல்ல வித்வான்களினுல் கொண்டாடத்தக்கது. பக்தி முதலிய ரஸங்களும் கவிதை இன்பம் முதலிய குணங்களும் நிறைந்தது. பரமேஶ்வரன் என்ற லக்ஷிய வஸ்துவை உடையது. கவிதைக்குரிய லக்ஷணங்கள் நிரம்பியது. நன்கு விளங்குகின்ற அலங்கா ரங்கள் அடங்கியது. வினயத்தை உடையது. ஆழமான கருத்துக்களை உள்ளடக்கிய குறிப்புக்களுடன் பிரகாசிக்கின்றது. பாராயணம் செய்பவர்களுக்கு மங்களத்தை உண்டுபண்ணக் கூடியது.

**इदं ते युक्तं वा परमशिव कारुण्यजलधे**
**गतौ तिर्यग्रूपं तव पदशिरोदर्शनधिया ।**
**हरिब्रह्माणौ तौ दिवि भुवि चरन्तौ श्रमयुतौ**
**कथं शम्भो स्वामिन् कथय मम वेद्योऽसि पुरतः ॥ ९९ ॥**

**இத³ம் தே யுக்தம் வா பரமஶிவ காருண்யஜலதே⁴**
**க³தௌ திர்யக்³ரூபம் தவ பத³ஶிரோத³ர்ஶனதி⁴யா ।**
**ஹரிப்³ரஹ்மாணௌ தௌ தி³வி பு⁴வி சரந்தௌ ஶ்ரமயுதௌ**
**கத²ம் ஶம்போ⁴ ஸ்வாமின் கத²ய மம வேத்³யோ(அ)ஸி புரத꞉ ॥ 99 ॥**

ஹே பரமஶிவ! காருண்ய ஸமுத்திரமே! உன்னுடைய பாதங்களையும், திருமுடியையும் தரிசனம் செய்ய ஹரியும், பிரம்மதேவனும், மிருகம், பக்ஷி இவைகளின் ரூபத்தை எடுத்துக்கொண்டார்கள். பூமியிலும் ஆகாயத்திலும் சஞ்சரி த்து சிரமத்தை அடைந்தார்கள். இது உனக்கு யுக்தமான காரியம்தானு? ஹே ஶம்போ! நீ என் முன்னுல் எப்படி அறியத் தகுந்தவனுக இருக்கப் போகிறுய்? நீயே சொல்.

**स्तोत्रेणालमहं प्रवच्मि न मृषा देवा विरिञ्चादय:**
**स्तुत्यानं गणनाप्रसङ्गसमये त्वामग्रगण्यं विदु: ।**
**माहात्म्याग्रविचारणप्रकरणे धानातुषस्तोमव-**
**द्धूतास्त्वां विदुरुत्तमोत्तमफलं शम्भो भवत्सेवका: ॥ १०० ॥**

**ஸ்தோத்ரேணலமஹம் ப்ரவச்மி ந ம்ருஷா தே³வா விரிஞ்சாத³ய:**
**ஸ்துத்யானம் க³ணனாப்ரஸங்க³ஸமயே த்வாமக்³ரக³ண்யம் விது³: ।**
**மாஹாத்ம்யாக்³ரவிசாரணப்ரகரணே தா⁴னாதுஷஸ்தோமவ-**
**த்³தூ⁴தாஸ்த்வாம் விது³ருத்தமோத்தமப²லம் ஶம்போ⁴ ப⁴வத்ஸேவகா:**
**॥ 100 ॥**

ஹே ஶம்புவே! துதிக்கத் தகுந்தவர்களுடைய எண்ணிக்கையைப் பேசும்போது உன்னுடைய ஸேவகர்களான ஹரி, ப்ரும்மாதி தேவர்கள் உன்னையே முதல்வனாக அறிகிறார்கள். தேவதைகளுடைய பெருமைகளைப் பற்றி விசாரணை செய்யும் காலத்தில் எல்லாதேவதைகளும் தானியத்திலிருந்து பிரிந்து ஓடும் உமிக்கூட்டம் போல ஆகி விலகிவிடுகிறார்கள். நீ ஒருவன் தான் உத்தமமான பலஸ்வரூபன் என்று அறிகிறார்கள். நான் சொல்வது சத்தியம். இது வரை சொன்னதெல்லாம் பொய்யல்ல. உன்னைத் தோத்திரம் செய்தது போதும். (எவ்வளவு, துதித்தாலும் இறைவன் புகழ் முற்றும் பாடி முடியாதாகையால் ஸ்ரீ பகவத்பாதர்கள் இத்துடன் போதும் என்று முடிக்கிறார்கள்.)

**ஓம் தத்ஸத் இதி ஸ்ரீ ஜகத்குரு**
**ஸ்ரீமத் ஶங்கர பகவத் பாதர்கள்**
**அருளிய ஶிவானந்த³லஹரீ**
**ஸம்பூர்ணம்.**

[ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம் பரமாசாரியர்களின் ஶிவானந்த³லஹரீ பற்றிய அருள் வாக்கு தனியாகப் பிரசுரிக்கப்பட்டு இருக்கிறது. ஸ்ரீ பகவத்பாதர்கள் அருளிய கிரந்தத்தின் மஹிமையைப்பற்றி ஸ்ரீ பகவத்பாதர்களின் அவதாரபூதர்களான பரமாசாரியர்கள் கூறியிருப்பதைவிட வேறு யார் அதிகமாக கூறமுடியும்?]

**சுபம்.**



உ

# பகவான் ஸ்ரீ ரமணமஹரிஷி

**ஶிவானந்த³லஹரீயின் ஸாரம்** என்று
**பொறுக்கி எடுத்த 10 ஶ்லோகங்களை அதே வரிசையில்
பக்தர்களின் ஸௌகர்யதிற்காக தினந்தோறும்
பாராயணம் செய்யக் கீழே பிரசுரிக்கப்பட்டிருக்கிறது.**

**(1) 61-வது ஶ்லோகம்:**

अङ्कोलं निजबीजसन्ततिरयस्कान्तोपलं सूचिका
साध्वी नैजविभुं लता क्षितिरुहं सिन्धुः सरिद्वल्लभम् ।
प्राप्नोतीह यथा तथा पशुपतेः पादारविन्दद्वयं
चेतोवृत्तिरुपेत्य तिष्ठति सदा सा भक्तिरित्युच्यते ॥ ६१ ॥

அங்கோலம் நிஜபீ³ஜஸந்ததிரயஸ்காந்தோபலம் ஸூசிகா
ஸாத்⁴வீ நைஜவிபு⁴ம் லதா க்ஷிதிருஹம் ஸிந்து⁴: ஸரித்³வல்லப⁴ம் ।
ப்ராப்னோதீஹ யதா² ததா² பஶுபதே: பாதா³ரவிந்த³த்³வயம்
சேதோவ்ருத்திருபேத்ய திஷ்ட²தி ஸதா³ ஸா ப⁴க்திரித்யுச்யதே ॥ 61 ॥

**(2) 76-வது ஶ்லோகம்:**

भक्तिर्महेशपदपुष्करमावसन्ती
कादम्बिनीव कुरुते परितोषवर्षम् ।
सम्पूरितो भवति यस्य मनस्तटाक-
स्तज्जन्मसस्यमखिलं सफलं च नाऽन्यत् ॥ ७६ ॥

ப⁴க்திர்மஹேஶபத³புஷ்கரமாவஸந்தீ
காத³ம்பி³னீவ குருதே பரிதோஷவர்ஷம் ।
ஸம்பூரிதோ ப⁴வதி யஸ்ய மனஸ்த்தடாக-
ஸ்தஜ்ஜன்மஸஸ்யமகி²லம் ஸப²லம் ச நா(அ)ன்யத் ॥ 76 ॥

**(3) 83-வது ஶ்லோகம்:**

जननमृतियुतानां सेवया देवतानां
न भवति सुखलेशः संशयो नास्ति तत्र ।
अजनिममृतरूपं साम्बमीशं भजन्ते
य इह परमसौख्यं ते हि धन्या लभन्ते ॥ ८३ ॥

ஜனனம்ருதியுதானும் ஸேவயா தே³வதானும்
ந ப⁴வதி ஸுக²லேஶ: ஸம்ஶயோ நாஸ்தி தத்ர ।
அஜனிமம்ருதரூபம் ஸாம்ப³மீஶம் ப⁴ஜந்தே
ய இஹ பரமஸௌக்²யம் தே ஹி த⁴ன்யா லப⁴ந்தே ॥ 83 ॥

(4) 6-வது ஶ்லோகம்:

घटो वा मृत्पिण्डोऽप्यणुरपि च धूमोऽग्निरचलः
पटो वा तन्तुर्वा परिहरति किं घोरशमनम् ।
वृथा कण्ठक्षोभं वहसि तरसा तर्कवचसा
पदाम्भोजं शम्भोर्भज परमसौख्यं व्रज सुधीः ॥ ६ ॥

க⁴டோ வா ம்ருத்பிண்டோ³(அ)ப்யணுரபி ச தூ⁴மோ(அ)க்³நிரசல:
படோ வா தந்துர்வா பரிஹரதி கிம் கோ⁴ரஶமனம் ।
வ்ருதா² கண்ட²க்ஷோப⁴ம் வஹஸி தரஸா தர்கவசஸா
பதா³ம்போ⁴ஜம் ஶம்போ⁴ர்ப⁴ஜ பரமஸௌக்²யம் வ்ரஜ ஸுதீ⁴: ॥ 6 ॥

(5) 65-வது ஶ்லோகம்:

वक्षस्ताडनशङ्कया विचलितो वैवस्वतो निर्जराः
कोटीरोज्ज्वलरत्नदीपकलिकानीराजनं कुर्वते ।
दृष्ट्वा मुक्तिवधूस्तनोति निभृताश्लेषं भवानीपते
यच्चेतस्तव पादपद्मभजनं तस्येह किं दुर्लभम् ॥ ६५ ॥

வக்ஷஸ்தாட³னஶங்கயா விசலிதோ வைவஸ்வதோ நிர்ஜரா:
கோடீரோஜ்ஜ்வலரத்நதீ³பகலிகாநீராஜனம் குர்வதே ।
த்³ருஷ்ட்வா முக்திவதூ⁴ஸ்தனோதி நிப்⁴ருதாஶ்லேஷம் ப⁴வானீபதே
யச்சேதஸ்தவ பாத³பத்³மப⁴ஜனம் தஸ்யேஹ கிம் து³ர்லப⁴ம் ॥ 65 ॥

(6) 10-வது ஶ்லோகம்:

नरत्वं देवत्वं नगवनमृगत्वं मशकता
पशुत्वं कीटत्वं भवतु विहगत्वादि जननम् ।
सदा त्वत्पादाब्जस्मरणपरमानन्दलहरी
विहारासक्तं चेद्धृदय मिह किं तेन वपुषा ॥ १० ॥

நரத்வம் தே³வத்வம் நக³வனம்ருக³த்வம் மஶகதா
பஶுத்வம் கீடத்வம் ப⁴வது விஹக³த்வாதி³ ஜனனம் ।
ஸதா³ த்வத்பாதா³ப்³ஜஸ்மரணபரமானந்த³லஹரீ
விஹாராஸக்தம் சேத்³த்⁴ருத³ய மிஹ கிம் தேன வபுஷா ॥ 10 ॥

(7) 12-வது ஶ்லோகம்:

गुहायां गेहे वा बहिरपि वने वाऽद्रि शिखरे
जले वा वह्नौ वा वसतु वसतेः किं वद फलम् ।
सदा यस्यैवान्तः करणमपि शम्भो तव पदे
स्थितं चेद्योगोऽसौ स च परमयोगी स च सुखी ॥१२ ॥

கு3ஹாயாம் கே3ஹே வா ப3ஹிரபி வனேவா(அ)த்3ரி ஶிக2ரே
ஜலே வா வஹ்னௌ வா வஸது வஸதே: கிம் வத3 ப2லம் ।
ஸதா3 யஸ்யைவாந்த: கரணமபி ஶம்போ4 தவ பதே3
ஸ்தி2தம் சேத்3யோகோ3(அ)ஸௌ ஸ ச பரமயோகீ3 ஸ ச ஸுகீ2 ॥ 12 ॥

(8) 9-வது ஶ்லோகம்:

गभीरे कासारे विशति विजने घोरविपिने
विशाले शैले च भ्रमति कुसुमार्थं जडमतिः ।
समर्प्यैकं चेतः सरसिजमुमानाथ भवते
सुखेनावस्थातुं जन इह न जानाति किमहो ॥ ९ ॥

க3பீ4ரே காஸாரே விஶதி விஜனே கோ4ரவிபினே
விஶாலே ஶைலே ச ப்4ரமதி குஸுமார்த2ம் ஜட3மதி: ।
ஸமப்யைகம் சேத: ஸரஸிஜமுமாநாத2 ப4வதே
ஸுகே2னாவஸ்தா2தும் ஜன இஹ ந ஜானாதி கிமஹோ ॥ 9 ॥

(9) 11-வது ஶ்லோகம்:

वटुर्वा गेही वा यतिरपि जटी वा तदितरो. :
नरो वा यः कश्चित् भवतु भव किं तेन भवति ।
यदीयं हृत्पद्मं यदि भवदधीनं पशुपते
तदीयस्त्वं शम्भो भवसि भवभारं च वहसि ॥ ११ ॥

வடுர்வா கே3ஹீ வா யதிரபி ஜடீ வா ததி3தரோ
நரோ வா ய: கஶ்சித் ப4வது ப4வ கிம் தேன ப4வதி ।
யதீ3யம் ஹ்ருத்பத்3மம் யதி3 ப4வத3தீ4னம் பஶுபதே
ததீ3யஸ்த்வம் ஶம்போ4 ப4வஸி ப4வபா4ரம் ச வஹஸி ॥ 11 ॥

(10) 91-வது ஶ்லோகம்:

आद्याऽविद्या हृद्गता निर्गतासीद्विद्या
हृद्या हृद्गता त्वत्प्रसादात् ।
सेवे नित्यं श्रीकरं त्वत्पदाब्जं
भावे मुक्तेर्भाजनं राजमौले ॥ ९१ ॥

ஆத்³யா(அ)வித்³யா ஹ்ருத்³க³தா நிர்க³தாஸீத்³வித்³யா
ஹ்ருத்³யா ஹ்ருத்³க³தா த்வத்ப்ரஸாதா³த் ।
ஸேவே நித்யம் ஶ்ரீகரம் த்வத்பதா³ப்³ஜம்
பா⁴வே முக்தேர்பா⁴ஜனம் ராஜமௌலே ॥ 91 ॥